உ

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்

மலர் 21 | துன்முகி ஆண்டு புரட்டாசித் திங்கள் செப்டம்பர்-1956 | இதழ் 6

## திருப்புகழ்

திருச்செந்தூர்

சந்தன சவாது நிறைகற் பூர
குங்கும படீர விரைகத் தூரி
தண்புழு களாவு களபச் சீத வெகுவாச

சண்பக கலார வகுளத் தாம
வம்புது கிலார வயிரக் கோவை
தங்கிய கடோர தரவித் தார பரிதான

மந்தர மதான தனமிக் காசை
கொண்டுபொ ருள்தேடு மதிநிட் டூர
வஞ்சக விசார இதயப் பூவை யனையார்கள்

வந்தியி டுமாய விரகப் பார்வை
அம்பிலு ளம்வாடு மறிவற் றேனை
வந்தடி மையாள இனிஎப் போது நினைவாயே

இந்த்ரபு ரிகாவல் முதன்மைக் கார
சம்ப்ரம மயூர துரகக் கார
என்றும கலாத இளமைக் கார குறமாதின்

இன்பஅ நுபோக சரசக் கார
வந்தஅ சுரேசர் கலகக் கார
எங்களு மைசேயெ னருமைக் கார மிகுபாவின்

கொண்டு பொருள் தேடு=மிகுந்த ஆசை கொண்டு பணம் தேடுகின்றவராய, அதிநிட்டூர=மிகவும் கொடுமையுடைய, வஞ்சக விசார இதய=வஞ்சனைச் செயல்களை ஆராய்கின்ற மனத்தையுடைய, பூவை அனையார்கள்=நாகணவாய்ப்பறவை போன்ற பொதுமகளிருடைய, வந்திஇடு=துன்பத்தைத் தருகின்ற, மாய விரக பார்வை அம்பில் உளம் வாடும்=மாயமும் காமமும் நிறைந்த பார்வையாகிய அம்பினால் உள்ளம்வாடுகின்ற, அறிவு அற்றேனை=அறிவு அற்றுப்போன அடியேனிடம், வந்து அடிமை ஆள இனி எப்போது நினைவாயே=எழுந்தருளிவந்து அடிமையாகக் கொண்டு ஆட்கொள்ள இனி எப்போது தேவரீர் நினைப்பீரோ?

## பொழிப்புரை

இந்திரனது நகரமாகிய அமராவதியைக் காத்தருளும் முதல்வரே! மிக்க பெருமையுடைய மயிலைக் குதிரைவாகனம்போல் செலுத்துபவரே! எந்நாளும் அகலாத இளமையுடையவரே! வள்ளிநாயகியை(ஆன்மாக்களின்பொருட்டு)மணந்துவாழ்பவரே! போருக்கு வந்த அசுர வேந்தர்களை யழித்தவரே! எங்கள் உமாதேவியின் புதல்வர் என்னும் அருமையுடையவரே! மிகுந்த பாவிணங்களையுடைய செய்ய தமிழ் மொழியால் அடியார்கள் பாடும் நான்கு கவிகளையுடையவரே! கிரவுஞ்ச மலையைப் பிளந்த வேலாயுதத்தின் ஆற்றலையுடையவரே! இனிய சொற்களையுடைய அடியார்களிடம் எளிமை பூண்டவரே! அழகிய சந்திரனைச் சூடிய சிவமூர்த்தியின் சமயத்தைப் பரப்புகின்றவரே! மந்திர உபதேசத்தின் மகிமையை யுடையவரே! திருச்செந்தூரில் வாழுந் தேவர்கள் போற்றும் பெருமிதம் உடையவரே! சந்தனம், சவ்வாது, நிறைந்த பச்சைக் கர்ப்பூரம், குங்குமப்பூ கலந்த சந்தனம், கஸ்தூரி, குளிர்ந்த புனுகு இவைகள் கலந்த கலவைக் குழம்பு பூசப்பட்டதாய், குளிர்ச்சியும் மிகுந்த மணமும் உடைய சண்பக மலர் செங்கழுநீர் மலர், மகிழ மலர் மாலைகளையுடையதாய், இரவிக்கை ஆடையுடன் கூடியதாய், முத்துமாலை வைரமாலை பூண்டதாய், கடினமும் உயர்வும் விசாலமும் பருமையும் உடையதாய், மந்தரமலைபோல் உள்ள தனங்களை உடையவராய், மிக்க ஆசை கொண்டு பணத்தைத் தேடுகின்ற மிகுந்த கொடியவர்களாய், வஞ்சனையான ஆராய்ச்சியுடைய மனமுடையவர்களாய், நாகணவாய்ப் பறவை போன்றவர்களாயுள்ள பொது மாதர்களுடைய, துன்பத்தைத் தருகின்ற மாயமும் காமமும் உடைய கண் பார்வையாகிய அம்பினால் மனம் வாடுகின்ற அறிவற்றவனாகிய அடியேன் முன் வந்து என்னை ஆட்கொள்ளுமாறு இனி எப்போது நினைப்பீரோ?

## விரிவுரை

**இந்திரபுரி காவல் முதன்மைக்கார:—**

இந்திரனுடைய நகரமாகிய அமராவதியை சூரபன்மனுடைய மகன் பானுகோபன் இடித்துத் தீக்கு இரையாக்கிப் பொடி செய்து

அழித்துவிட்டனன். முருகப்பெருமான் சூராதி யவுணரை யழித்து, இடிந்த அமராவதியைப் புதுப்பித்து, இந்திரனுக்கு முடி சூட்டி, அவனை ஐராவத முதுகில் ஏற்றி பவனிவரச் செய்து மீளவும் அந் நகருக்கு இடர் வரா வண்ணம் பாதுகாவல் புரிந்தனர்.

"அயிராவத முதுகின் தேற்றி
அடையோமென இனிதன் பேத்தும்
அமரேசனை முழுதுங் காத்த பெருமாளே"

தேரணியிட்டுப் புரமெரித்தான் மகன் செங்கையில் வேல்
கூரணியிட்டணு வாகிக் கிரவுஞ்சம் குலைந்தரக்கர்
நேரணியிட்டு வளைந்த கடகம் நெளிந்தது சூர்ப்
பேரணி கெட்டது தேவேந்த்ர லோகம் பிழைத்ததுவே.

என்றுஅருணகிரிநாதர் பிறஇடங்களிலும் முருகன் இந்திரபுரியைக் காத்தருளிய கருணைத் திறத்தை வியந்து கூறுகின்றார்.

இந்திராதி தேவர்கள் இளம்பூரணனைச் சரணமடைந்து தொழுது வழிபட்டதனுல், இமையவர்கள் நகரை எம்பெருமான் காவல் புரிந்தனர். "தொழுது வழிபடு மடியர் காவல்காரப் பெருமாளே" என வரும் பழநிமலைத் திருப்புகழாலும் அறிக.

**சம்ப்ரம மயூர துரகக்கார:—**

மயில் மிகவும் பெருமையுடையது. ஓங்கார வடிவமானது. அது வாகனத்திற்குரிய குதிரைபோல் பெருமானை என்றும் தாங்கி நிற்பது. அதனுல் அருணகிரிநாதர் பல இடங்களில் மயிலைக் குதிரையென்றே உருவகம் புரிகின்றனர்.

"பட்சி யெனும் உக்ர துரகமும்" — திருப்புகழ்.
"ஓகார பரியின் மிசை வரவேணும்" — திருப்புகழ்.
"ஆடும்பரி" — அநுபூதி.

**என்றுமகலாத இளமைக்கார:—**

முருகமூர்த்திக்கு உரிய அநேக சிறப்புக்களுள் முதன்மையும் வேறு எத்தேவுக்குமில்லாத தனிமையும் இந்த மாருதஇளமையே யாகும். அதனுல் பாம்பன் அடிகள் அடிக்கடி "இளம்பூரணன்" என்று எம்பெருமானைக் குறிப்பிடுவார்கள். என்றும் குழந்தை வடிவில் நின்று அடியவர்கட்கு இன்ப அருள் பாலிக்கின்ற தெய்வம் இது.

தன்பால் காதலித்து வந்த அடியவர்க்கு முருகன் இள நலங் காட்டி முன்னின்று வேண்டியாங்கு வேண்டிய வரங் கொடுத்து அருள்புரிவன்.

மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி
அஞ்சல் ஓம்புமதி அறிவல் நின்வரவென
அன்புடை நன்மொழி அளைஇ விளிவு இன்று



இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்து
ஒருநீயாகத் தோன்ற விழுமிய
பெறலரும் பரிசில் நல்கும். —திருமுருகாற்றுப்படை.

குமாரசுவாமி என்ற திருப்பெயராலும், பாலசுப்ரமண்யம் என்ற திருப்பெயராலும் அறிக.

**குறமாதின் இன்ப அநுபோக சரசக்கார:—**

இறைவன் திருவருளாகிய அம்பிகையுடன் கூடியிருக்கின்றுன் என்பதன் உட்பொருள் உயிர்களை உய்விக்கும் பொருட்டு என்பது ஆகும்.

தென்பா லுகந்தாடுந் தில்லைச் சிற்றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேல் பேதா யிருநிலமும்
விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ. —திருவாசகம்.

இங்கே வள்ளியம்மை இச்சா சக்தி. இச்சா சக்தியுடன் முருகன் கலந்திருப்பது உயிர்கள் இச்சை யமைந்து கன்மங்களைத் துய்த்து, கன்ம நீக்கம் பெற்று மலபரிபாகமுற்று, வீடுபேறு பெறும் பொருட்டே என வுணர்க.

"இச்சை வைத்து உயிர்க்குயிராய் தழைத்தது" —தாயுமானுர்.

**வந்த அசுரேசர் கலகக்கார:—**

அசுரர் தலைவர்களாகிய சூராதி யவுணர், அமரர்களைச் சிறைவிடுமாறு ஆறுமுகப் பெருமான் கூறிய அறவுரையைக் கேட்டு உய்யாமல், மூர்க்கத்தன மேற்கொண்டு போர்க்களத்தில் எதிர்த்து வந்தார்கள். பலப் பல மாயப் போர் புரிந்தார்கள். இறைவன் அவர்களைத் தண்டித்தது மறக் கருணையாம் என்க. குற்றஞ் செய்கின்ற புதல்வனைத் தந்தை தண்டிக்கின்றுர். மகன் திருந்தி உய்தல் வேண்டும் என்ற கருணையால் தண்டிக்கின்றுர். இதே நியாயந்தான் முருகவேள் அசுரேசரைத் தண்டித்தது என்பதை யுணர்க.

**எங்களுமை சேயெனருமைக்கார:—**

உமா - உ ம அ என்ற மூன்று மந்திரங்களின் சேர்க்கையே உமா என்ற மந்திரம் என வுணர்க. உ - காத்தல், ம - ஒடுக்கல், அ - ஆக்கல். முத்தொழில்களையும் தனது சந்நிதியில் தனது ஆற்றலைக் கொண்டு செய்விக்கும் முதல்வி உமாதேவியார். அவளின்றி ஓர் அணுவும் அசையாது. ஞானத்தின் சொரூபம்; சகல லோக ஏக நாயகி. அப் பரம நாயகியின் அன்பு நிறைந்த இளங் குழவி முருகவேள். "பார்வதி ப்ரிய நந்தனய நம:" என்பது முருகனுடைய நூற்றெட்டு மந்திரங்களுள் ஒன்று. ஆகவே பார்வதி பாலன் என்ற அருமைக்கும் பெருமைக்கும் உரியவர் முருகர்.

இனி உமை என்பது சித்து; முருகர் என்பது ஆனந்தம். அறிவிலிருந்து ஆனந்தம் தோன்றும். "ஞானனந்தம்" "அறிவானந்தம்," "சிதானந்தம்" என்று வரும் சொற்களை உன்னுக.

அஞ்ஞானத்திலிருந்து துன்பம் தோன்றும். ஞானத்திலிருந்து இன்பந் தோன்றும். ஆகவே அருணகிரிநாதருக்கு அம்பிகையின் பரிபூரண அருள் உண்டு. அவர் பல இடங்களில் அம்பிகையை வாயார வாழ்த்துகின்றார். "எங்கள் தாய்" என்று அவர் கூறும் உரிமையை நோக்குக.

"இமவரை தருங் கருங்குயில்
எனதுயி ரெனுந் த்ரியம்பகி"

"நாளுமினிய கனி எங்களம்பிகை"

"அமுதமதையருளி எமையாளு மெந்தைதன்
திருவுருவின் மகிழெனது தாய்பயந்திடும் புகல்வோனே"

—திருப்புகழ்.

**மிகுபாவின் செந்தமிழ் சொல் நாலு கவிதைக்கார:—**

தமிழில் பாவினங்கள் நான்கு; வேண்பா, வஞ்சிப்பா, கலிப்பா, ஆசிரியப்பா என்பன. இனி வேண்பாவில் நேரிசை வேண்பா, சிந்தியல் வேண்பா, ஒருவிகற்ப வேண்பா, இருவிகற்ப வேண்பா, குறள் வேண்பா இப்படிப் பல உட் பிரிவுகள் உண்டு; இவ்வாறே வஞ்சிப்பாவிலும், கலிப்பாவிலும், ஆசிரியப்பாவிலும் பலபேதங்கள் இருக்கின்றன. இவற்றின் விவரங்களை யாப்பிலக் கணத்தில் அறிக.

இனி நாலு கவிகள்:--

ஆசுகவி, மதுர கவி, சித்திர கவி, வித்தார கவி, என்பவை; ஆசு கவி விரைந்து உடனுக்குடன் பாடுவது; மதுர கவி, இனிமை யாகப் பாடுவது; ஏகபாதம், நாகபந்தம், தேர்ப்பந்தம், மயூர பந்தம், கோமூர்த்திரி முதலியவை சித்திர கவி. பலவித சாங்கோ பாங்கமாகப் பாடுவது வித்தார கவி; இந்த நாலு கவிகளையும் பாடும் திறத்தைத் தன்னை வழிபட்ட அடியவர்கட்கு அள்ளித் தரும் வள்ளல் முருகன்.

'நாகாசல வேலவ நாலுகவி
த்யாகா சுரலோக சிகா மணியே!'

—அநுபூதி.

இந்த நாற் கவிகளிலும் வல்லவர் நம் அருணகிரிநாதர். இதனை அவரே சீர்பாத வகுப்பில் கூறுகின்றார்.

"முடிய வழிவழியடிமை யெனுமுரிமை அடிமைமுழு
துலகறிய மழலை மொழி கொடுபாடும் ஆசுகவி
முதல மொழிவன நிபுண மதுப முகரித மவுன
முகுள பரிமள நிகில கவிமாலை சூடுவதும்"



**குன்றெறியும் வேலின் வலிமைக்கார:—**

தாரகனுக்குத் தோழனும் மாயத்தில் வல்லவனுமாகிய கோடிய அசுரன் தேவர்களையும் முனிவர்களையும் வருத்துவதே தொழிலாக வுடையவன். பரம சாதுவாகிய பறவை அன்றில். அதற்குக் கிரவுஞ்சம் என்று மற்றொரு பேருமுண்டு. அந்த கிரவுஞ்சப் பறவை யுருவில் மலைபோல் நின்று வஞ்சனை செய்வான். அதனல் அந்த அசுரன் கிரவுஞ்சாசுரன் எனப் படுவான். அகத்தியர் சாபத்தினல் மலை யுருவாகவே நின்று கோடுமை பல செய்து வந்தான். முருகனுடைய வேல் அக் கிரவுஞ்ச மலையைப் பிளந்து அக் கோடுமைக்கு முற்றுப்புள்ளி வைத்தது. அது முதல் அமரரும் இருடியரும் இடர் தீர்ந்தனர்.

**சேஞ்சொ லடியார்க ளெளிமைக்கார:—**

செவ்விய இனிய சொற்களை மொழியும் அடியார்களிடம், மூவருந் தேவருங் காணத முருகன் மிக எளியனக நின்று அருள்புரிவான்.

"மாலயனுக் கரியானே
மாதவரைப் பிரியானே"

"அபிநவதுங்க கங்காநதிக்கு மைந்த
அடியவர்க் கெளியோனே"

—திருப்புகழ்.

**திங்கள் முடிநாதர் சமயக்கார:—**

திங்கள் முடிநாதர் சமயம் சிவசமயம். சிவசமயத்திற்குரிய மூர்த்தி குமாரமூர்த்தி. குமாரக்கடவுள் திருஞானசம்பந்தரை அதிஷ்டித்து சிவசமயத்தைப் பாதுகாத்தருளினர்.

முருகவழிபாடு வேறு சிவ வழிபாடு வேறு என எண்ணிச் சிலர் மலைவர். சிவமூர்த்தமே முருகமூர்த்தம். நடராஜவடிவம் தட்சிணமூர்த்தி வடிவம் என சிவமூர்த்தங்களில் பல காணப்படு வது போல் முருகமூர்த்தமும் ஒன்று என வுணர்க. இதனை யறியாது அழிந்தவன் சூரபன்மன். எனவே சூரபன்மன் செய்த பிழையை மற்றவர்கள் மேற்கோள்ளக் கூடாது. சிவமூர்த்தமே குமாரமூர்த்தம். குமாரமூர்த்தியை வழிபடுவோர் தாம் ஒழுகுவது கௌமார சமயம் எனவும் அது சைவத்திற்கு வேறனது எனவும் கூறி இடர்ப்படுவர். இத்தகைய இடர்களை நீக்கவே அருணகிரி நாதர் முருகனைச் சிவசமய மூர்த்தி என விளக்கமாக விளம்பு கின்றார்.

"திருமருவு புயனயனொ டயிராவதக்குரிசில்
அடிபரவு பழநிமலை கதிர்காம முற்றுவளர்
சிவசமய அறுமுகவ திருவேரகத்திலுறை பெருமாளே"

—திருப்புகழ்.

**மந்த்ரோபதேச மகிமைக்கார:—**

மந்திரங்களை அவரவர் பரிபக்குவத்துக்கு ஏற்ப குருவாக நின்று உபதேசிக்கின்ற மூர்த்தி முருகமூர்த்தியாகும். அவரைக் குருவாகக் கொண்டு வழிபட்டால் அவர் நிச்சயமாக ஒரு சமயம் குருவாய் வெளிப்பட்டு அருள்புரிவார்.

அகத்தியருக்கும் அருணகிரிநாதருக்கும் குருமூர்த்தியாக வந்து மந்த்ரோபதேசம் புரிந்தருளினர். உண்மைத் துறவியாக அண்மையில் வாழ்ந்த பாம்பன் சுவாமிகட்குக் குருமூர்த்தியாக வந்து அருள்புரிந்தனர்.

முருகன் தனிவேல் முனிநங் குருவென்
றருள் கொண்டறியார் அறியுந்தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின்றதுவே.

என்ற அநுபூதியை ஊன்றிப் படித்து உணர்க. மேலும் இறுதியாகிய அநுபூதியிலும் உறுதியுடன் "குருவாய் வருவாய் அருள்வாய் குகனே" என்று சுவாமிகள் பாடி முடிக்கின்றனர். எல்லோருக்கும் அவனே குரு. "ஆதி குருப்புகழை மேவுகின்ற கோற்றவன்" அவனேயாகும்.

உப - சமீபம்; தேசம் - இடம். இறைவனுடைய அருகில் ஆன்மாவைச் சேர்ப்பது உபதேசம்.

**செந்திநகர்வாழும் அருமைத் தேவர் பெருமாளே:—**

இரண்டாவது படைவீடாகிய திருத்தலம் திருச்செந்தூர். சுவாதிஷ்டான க்ஷேத்திரம். அங்கே நினைவுகளாகிய அலைகள் வந்து இறைவன் திருவடியிலே ஓய்ந்து ஒடுங்கிவிடுகின்றன. அதனால் 'அலைவாய்' என்று அப்பதிக்கு மற்றொரு பேரு முண்டு. பிறவிப் பெருங்கடலின் துறைமுகப் பட்டினம். அங்கு சென்றோர் பிறவிக் கடலினின்று உய்வுபெற்று முத்திக்கரை சேர்வர். அதனால் அங்கு வந்து தேவர்கள் வழிபடுகின்றார்கள். அந்த அருமையுடையவர்கள் என்று குறிப்பிடுகின்றார்.

### கருத்துரை

**செந்திமாநகரம் மேவிய கந்த நாயகனே! பந்தபாசத்தைத் தரும் மாதர் மயலில் அகப்படா வண்ணம் அடியேனை ஆண்டருளுவீர்!**



# கற்பு

## விஜயலட்சுமி

[மேல் கீழாவதும் கீழ் மேலாவதும் இறைவன் அருளாடல்]

விஜயலட்சுமிக்கு இளமையிலிருந்தே இயற்கையாக இசை யில் அபார ஞானம் இருந்தது. மனத்திலே மாசில்லாத அவளுடைய குரலும் அதற்கேற்ப சுகமாக அமைந்திருந்தது. விஜயலட்சுமிக்கு எல்லோருடனும் இனிமையாகப் பழகும் சுபாவமும், எளிமையில் வாழும் எண்ணமும், ஆடம்பரத்தில் ஒரு வகையான வெறுப்பும், தெய்வ பக்தியும் அணிகலன்களாக விளங்கின. மாநிறமாக இருப்பினும் அவள் முகத்தில் ஒருவகை யான களையும் சாந்தமான பார்வையும் இருந்தன. பெரியோர் களைக் கண்டால்பரமபக்தி. அடக்கமாக விழுந்து வணங்குவாள் ஆலயத்திற்கு நாடோறும் சென்று தொழுவாள். தனிமையில் இருந்து இனிமையாகப் பாடுவாள். அவள் பாடலைக் கேட்ட கல்லும் புல்லும் உருகும் என்றால் மனித உள்ளம் உருகுவதில் என்ன தடை?

"அப்பா! எனக்கு சுரஞானத்தில் அதிக விருப்பம்; நல்ல ஒரு பாட்டு வாத்தியாரை ஏற்பாடு செய்யப்பா!" என்று கேட்டாள். சிறு கிராமத்தில் பலசரக்குக் கடை வைத்திருக்கும் பலவேசனுக்குச் செல்வி விஜயலட்சுமியின் வேண்டுதலை நிறை வேற்றிவைக்கும் ஆற்றல் ஏது? குழந்தை கேட்கும்போது "முடியாது; அல்லது சக்தியில்லை" என்று கூறவும் மனம் வர வில்லை. "குழந்தாய்! கொஞ்சம் நாள் போகட்டும். நல்ல வாத்தியாரை நியமிக்கின்றேன்" என்று பக்குவமாக மறுமொழி புகன்றான். குழந்தை கெஞ்சிக் கேட்டதும், அதற்குக் கணவன் கூறிய பதிலும் பலவேசன் மனைவிக்குப் பிடிக்கவில்லை. ஆமாம் இவளுக்கு என்ன சங்கீதம்? சங்கீதம் படித்து கச்சேரி செய்யப்போகின்றாளோ? அதுவேறு வெட்டிச் செலவு. பாட்டு வாத்தியாருக்குச் சம்பளம் யார் தருவது? நம்ம பாடு சாண் ஏறி னால் முழம் சறுக்குகின்றதே" என்று வெடுப்பாகச் சொன்னாள்.

விஜயலட்சுமி அன்றாடம் ஆலயம் போகும்போது கோயி லில் ஓதுவார் பாடுகின்றதைக் கவனமாகக் கேட்பாள்; நாதஸ்வர வித்வான் வாசிப்பதையும் ஒருபுறம் நின்று ஒருமைப் பட்ட உள்ளத்தோடு உற்றுக் கேட்பாள். தூய வேட்டியில் கெட்டிச் சாயம் படிவது போல் ஒரு முறை கேட்டவுடன் அவளுக்குப் பாடல் ராகம் தாளம் எல்லாம் அப்படியே மனதில் படிந்துவிடும். வீட்டில் வந்து அதேமாதிரி பாடுவாள். இராக தாளங்களில் சந்தேகம் வருமானால் அந்த ஊரில் உள்ள ஒரு சங்கீத வித்வானிடம் தனிமையில் கேட்டுத் தெரிந்துகொள்வாள்.

ஒருநாள் சங்கீதவித்வானிடம் போய் பணிந்து "ஐயா! ஒரு சின்ன சந்தேகம். இருபத்தெட்டாவது மேளகர்த்தாவாகிய அரி காம்போதியைப் பஞ்சமம்பிடிக்காமல் பாடினால் நாட்டகுறிஞ்சி தானே. நாட்டகுறிஞ்சிஒருஅழகானராகம். சௌக்யமானபிடிகள் அதில் உண்டு. ஆஹா அன்றொருநாள் நீங்கள் கோயிலில் பாடு கின்றபோது தேனாறு ஓடுவதுபோல் இருந்தது. பாவிப் பிரமன் இரண்டுகாதுகளைப்படைத்தானே.எண்ணாயிரங்காதுபடைத்திருந் தால் பண்ணாரமுதைக்கேட்டுப் பருகலாம்"என்றாள். இளஞ்சிறுமி யின் ரசிப்புத்தன்மையையும் அவளுடைய அடக்கமான குணத் தையும் கண்ட அந்த ஆசிரியர் அதிக அன்புகொண்டார். விஜய லட்சுமி மீது அவருக்கு ஒரு அலாதியான பட்சம் ஏற்பட்டது. "குழந்தாய்! உனக்குச் சின்னஞ் சிறுவயதில் நல்ல ஞானத்தை ஆண்டவன் தந்திருக்கின்றான். நீ மாலை நேரத்தில் ஒரு அரை மணி நேரம் என்னிடம் வந்திரு. முறையே உனக்கு இசை ஞானத்தைத் தருவேன்" என்று கருணையுடன் கூறினார். வறுமையாளனுக்குத் தங்கப்புதையல் கிடைத்தது போல் இருந் தது விஜயலட்சுமிக்கு.

அதுபடி அன்றுமுதல் நாடோறும் மாலையில் சென்று அவரிடம் இசைபயின்று வந்தாள். கற்பூர மலையில் தீப்பிடிப்பது போல் அவளுக்கு இசை வளர்ச்சி ஓங்கியது. முற்பிறப்பில் விட்ட குறை போலும்.

வீட்டில் ஒருபுறமிருந்து பாட ஆரம்பித்துவிட்டால் தேனுண்ட வண்டுபோல் பலவேசன் பரவசமடைவான். "என்னடி ஓயாத பாட்டு? சட்டிபானையைக் கழுவு; வீட்டைக் கூட்டு; இந்தா இந்தச் சாணியை எடுத்து எருமுட்டை தட்டு;" என்று கடும் வேலை தருவாள் பலவேசன் மனைவி; "அப்படியே செய்கின்றேனம்மா! கோபிக்காதீர். வேலையிருந்தால் அதனைச் செய்வதுதானே பெண்களுக்கு அழகு" என்று பணிவுடன் கூறி எழுந்து தாய்தந்த வேலைகள் அத்தனையும்புரிவாள் விஜயலட்சுமி. அப்படி வேலை செய்யும்போதே சின்ன சுருதியில் உள்ளங் குழைந்து உருகிப் பாடிக்கொள்வாள்.

ராகம் : ஹேமவதி—தாளம் : ஆதி

பல்லவி

**வள்ளிமணவாளன் மலரடி நினைந்திட்டால்**
**உள்ளங் குழையுதடி.........குயிலே!**

அநுபல்லவி

**வள்ளலைக் கண்டால் அன்பு வெள்ளமாய் ஓடுது**
**உள்ளபடியே எந்தன் இதயமும் நாடுது**



சரணம்

**வீதியில் அன்று நான் விளையாடுந் தருணத்து**
**வேகமாய் வந்தென்பின்னல் பிடித்திழுத்தான் பித்து**
**பேதையென் உள்ளத்தில் பிடித்தது கண்ணீர் முத்து**
**பெய்துநின்றேன் மயில் பிரான்மீது அன்பு வைத்து"**

இப்படி புதியபுதிய பாடல்களைச் சுயமாகவே பாடுவாள். உள்ளங் குழைந்து பாடும் பாடலைக் கேட்டால் யார் மனந்தான் குழை யாது? ஊராரேல்லாம் அவளைக் கண்டு பரிந்து புகழ்வார்கள்; கொண்டாடுவார்கள்; பாராட்டுவார்கள். ஆனால் தாய்மட்டும் இதற்கு நேர்மாறு. "இவளுக்கேன்ன பாட்டு? குடும்பத்தில் உள்ள இவளுக்குச் சதா சங்கீதப் பைத்தியம். இது அடுக்குமா? மூதேவி" என்று சலிப்புடன் வைவாள். அதன் காரணம் அறி யாது விஜயலட்சுமி விழிப்பாள். முருகனை நினைந்து உருகுவாள்.

இப்போது விஜயலட்சுமிக்கு வயது பதினேழு; நல்ல இளமை. வளமையில்லாத குடும்பத்தில் வளர்வதனால் வயதுக்கு ஏற்ற உடல் அமைப்பு இல்லை. சற்று மேலிந்திருந்தாள். பூத்த பூங்கோடிபோல் விளங்கினாள்.

ஒருநாள் மாலை 7 மணி. பலவேசன் தன் கடையில் இருந்து வியாபாரம் புரிந்துகொண்டிருந்தான். தாய் எருமுட்டைக் கூடையை எடுத்துக்கொண்டு அந்த வூரில் உள்ள ஒரு தனவந்தன் வீட்டுக்கு விற்பதற்காகப் போயிருந்தாள். வீட்டுக்குள் இருந்து விஜயலட்சுமி சமைத்துக்கொண்டிருந்தாள். நகர சோதனையின் பொருட்டு அடுத்தநகரத்து அரசகுமாரன் மாறு வேடம் புனைந்து பலவேசன் வீட்டுவழியாகப் போய்க் கொண்டிருந்தான். அது சமயம் விஜயலட்சுமி நாட்டகுறிஞ்சி யில் முருகன் மீது ஒரு அருமையான கீர்த்தனத்தைப் பாடிக் கொண்டிருந்தாள்:

ராகம் : நாட்டக்குறிஞ்சி—தாளம் : ஆதி

பல்லவி

**முருகனைப் பணிந்திடுவோம் அதனால் நமது**
**இருவினை தணிந்திடுவோம்........திரு**

அநுபல்லவி

**கருதுவார் வினையெலாம் கனலிடைப் பஞ்சாய் நீங்கும்**
**கலியினில் கண்கண்ட கடவுளாய் அருள் ஓங்கும்**

சரணம்

**அருணைமுநிவர்க்கருள் ஆறுமுக வேலனடி**
**ஆனைமுகற்கிளைய அநாதி மூலனடி**
**தருணத்தில் வந்திடர்கள் தவிர்க்குமநு கூலனடி**
**தாய் கருணாகரி சங்கரி பாலனடி"**

இந்த அழகிய இனிய பாடலைக் கேட்டான் இராஜகுமாரன். இசையிலே அவனுக்கு அளவற்ற வேட்கை. மதுவுண்ட வண்டு போல் மயங்கிவிட்டான். மெல்ல அந்த வீட்டிற்குள் சென்றான். தனித்த வீட்டுக்குள் புகுவது முறையன்று என்று அவன் மனம் புகன்றது. எனினும் இசை வெள்ளத்தில் மிதந்து நுழைந்தான். பாடிக்கொண்டே சமைக்கும் பாவையைக் கண்டான். அவளும் இவனைக் கண்டு ‘என்ன வேண்டும்?’ என்று வினவினாள். அவளுக்கு என்று அமைந்திருந்த அடக்கமான குரலில் அன்பு நிலவியது. மன்னன் மகன் அவளுடைய தோற்றம், குரலின் ஏற்றம் இவைகளில் மிகவும் ஈடுபட்டுவிட்டான். “ஒன்றுமில்லை; கொஞ்சம் குடிக்கத் தண்ணீர் வேண்டும்” என்றான். அவள் தண்ணீருக்குப் பதில் பால் கொணர்ந்து தந்து, “நீங்கள் களைப்பாக இருக்கின்றீர். இதோ இந்தப் பாலைக் குடியுங்கள்” என்றாள். பாலை வாங்கிய பார்த்திபன், “இப்போது நீங்கள் பாடிய ராகம் பாலினும் இனிமையாக இருந்தது. உங்கள் பேர்?”

“என் பேர் விஜயலட்சுமி. இந்தவூரில் என் இசையைக் கேட்டு மகிழ்பவர் யார் இருக்கின்றார்? எங்கும் நிறைந்த எம் பெருமான்தான் கேட்டுக் கொண்டிருக்கின்றார். ஆத்மார்த்தமாக அவர் கேட்க வேண்டும் என்றுதான் பாடுகின்றேன். அருணகிரியார் பாடலைக் கேட்ட அருளாளன் என் பாடலைக் கேட்பானோ? கேட்கமாட்டானோ? ஆனால் ஒரே ஒரு தைரியம். கருடன் பறக்கிற வானத்தில் கொசுவுந்தானே பறக்கின்றது, அதுபோல அப்பன் என் பாடலையுங் கேட்டுத் திருவுளம் இரங்குவான என்ற ஒரு நம்பிக்கையுமுண்டு. தாங்கள் எந்த ஊர்?”

“நான் அடுத்துள்ள ராஜேந்திரபுரி. அந்த நகரையாளும் வீரசேகரன் மகன்; என்பேர் **குணசேகரன்.** எனக்கு உன் இசையில் அளவுக்கு மேற்பட்ட ஈடுபாடு உண்டாயிற்று. நான் நகர் சோதனையின் பொருட்டு மாறு வேடம் புனைந்துவந்தேன். உன் பிதாவின் பேர் யாது?”

அவன் சொற்களைக் கேட்ட விஜயலட்சுமி நாணினாள். சற்று ஒதுங்கி நின்றாள். “வணக்கம்; என் பிதா பலவேசன் செட்டியார். சில்லரைக் கடை வியாபாரம். என் தாய் எரு முட்டை விற்கப் போயிருக்கின்றாள். ஏழைக் குடும்பம்; எங்கள் பிதாவுக்குக் கடனும் கொஞ்சம் உண்டு. மன்னவர் மைந்தராகிய தங்கள் வரவு எங்கள் பாக்கியம்.”

“பெண்மணியே! இவ்வளவு அரிய சங்கீதத்தை நான் இதுவரை கேட்டதேயில்லை. அரண்மனையில் எத்தனையோ சங்கீதவித்வான்கள் ஓயாது வந்து பாடிப் பரிசில் பெற்றுப் போகின்றார்கள். அவர்கள் பாடுகின்ற பாடல்கள் உயிரில்லாத ஓவியம்போல் உணர்ச்சியற்று சுவையற்று இருக்கின்றன. உன்



பாடல் என் உள்ளத்தை உருக்குகின்றது. நீ விருப்பமிருந்தால் இன்னொரு பாடல் பாடலாமா?”

“சுவாமீ! தாய் தந்தையர் இல்லாத நேரம். நான் இளஞ் சிறுமி. தாங்கள் தனித்திருக்கின்றீர். ஆகவே மன்னிக்க வேண்டும். திருவருள் கூட்டி வைத்தால் மற்றொரு சமயம் என் பாடலைக் கேட்கலாம்” என்றாள். மன்னன் மகன் “நல்லது” என்று கூறிவிட்டு வெறும் உடம்புமட்டுமாகச் சென்றான். அவன் உள்ளம் உணர்ச்சி எல்லாம் அவளிடமே நின்றுவிட்டன.

குணசேகரனுக்கு விஜயலட்சுமியிடம் ஏற்பட்ட அன்பு காதலாக மாறியது. எப்படியும் அவளை மணந்துகொண்டு சதா அவள் சங்கீதக் கடலில் முழுகி விளையாட வேண்டும் என்று திட்டமிட்டான். தன் கருத்தை எப்படி வெளியிடுவது? யாரிடம் தெரிவிப்பது? என்று அறியாது விழித்தான். அரண்மனையில் நிகழ்ந்த அவனுடைய ஜனன விழாவில் மெல்லத் தன் தோழன் மூலம் விஜயலட்சுமியின் இசையரங்கு நிகழ ஏற்பாடு செய்தான். இசை வெள்ளத்தில் அனைவரையும் முழுக வைத்தான். விஜயலட்சுமிக்குச் சன்மானமும் அள்ளி வழங்கினான்.

பலவேசனுக்குப் பரம சந்தோஷம். மகள் மூலம் அரசருடைய பரிச்சியமும் தன் தகுதிக்கு மேற்பட்ட சன்மானமும் கிடைத்தது பற்றிப் பெரிதும் உவந்தான். தன் புதல்வியின் பெருமையையும் இசையின் அருமையையும் அதற்குப் பின்னர்தான் அறிந்தான். அவளுக்கு நல்ல ஆடையும் சிறு அணிகலனும் செய்து அளித்தான்.

இரண்டொருதடவை குணசேகரன் மாறு வேடத்துடன் வந்து விஜயலட்சுமியின் இசையமுதைப் பருகி ஆறுதல் அடைந்தான். அடைந்தும் அமைதியடைந்தானில்லை.

“அன்புள்ள விஜயலட்சுமீ! அன்புக்கு உயர்வு தாழ்வு கிடையாது? உன்னை ஏழையின் புதல்வி; என்னை அரசகுமாரன் என்று கருதாதே. எல்லாரும் ஈசனுடைய குழந்தைகள். உலகமாகிய அரங்கிலே நாம் அனைவரும் ஒன்றுதான். உனது இசைத் தேனை நான் என்றும் பருக நாடுகின்றேன். என் வாழ்க்கைத் துணைவியாக உன்னை விரும்புகின்றேன். நீ மறுக்கமாட்டாய் என்றும் எண்ணுகின்றேன். இனி அரண்மனையில் நீ வாழலாம்; உன் மறுமொழியை எதிர்பார்க்கின்றேன்.

இங்ஙனம்
உன்னை விரும்பும்
**குணசேகரன்.**

இக்கடிதத்தை ஒரு அரச சேவகன் கொணர்ந்து விஜயலட்சுமியின் பால் ஈந்து சென்றான். இதனைத் திரும்பத் திரும்பப் படித்தாள். பெருமூச்சு எறிந்தாள்.

என் சிறுமை எங்கே? மன்னவர் பெருமை எங்கே? இசை ஒன்று நடுவில் இருந்து இணைக்கின்றதுபோலும். விருப்பு வேறுப்பு ஒன்றும் எனக்கு இல்லை. திருமணத்திலே நாட்டமும் இல்லை. இருப்பினும் ஒருநாள் நமது குருநாதர், "மகளே! உனக் குச் சிறந்த கணவன் வருவான். மலரினும் மேன்மையாக உன்னை உள்ளம் உவந்து ஆதரித்து அன்பு செய்வான். உன் எதிர்கால வாழ்க்கை சிறக்கும். உன் பொருட்டு நான் முருகனை வாழ்த்துகின்றேன்" என்று கூறி ஆசீர்வதித்தார். இது அவருடைய ஆசியின் பலன்தான் போலும். நம் தாய் மாற்ருந் தாயினும் பன்மடங்கு கொடுமையாக நம்மை வாட்டுகின்ருள். தந்தையோ பரம ஏழை. ஈசன் அருள்போல் எல்லாம் நடக்கட் டும்" என்று எண்ணினுள்.

"அருள் நிறைந்த அரசிளங்குமரரே! அநேக வணக்கம். நலம்.

தங்கள் கடிதத்தைக் கண்ணுற்றேன். எனக்கென்று ஒரு உரிமை என்பால் இல்லை. என்னை என்றும் ஆட்கொள்ளும் இளம் பூரணன் இன்னருள் போல் எல்லாம் நடக்கும். அவன் அருளுக்கு நன்றி.

அடிமை,

**விஜயலட்சுமி.**

இந்த மறுமொழிக் கடிதத்தைக் குணசேகரன் பலமுறை படித்தான். எழுத்தில் உள்ள ஆழம்; ஆழத்தில் உள்ள தெளிவு; தெளிவில் பிறக்குந் திருவருள் உறைப்பு ஆகிய இவைகளை உன்னினுன்; உருகினுன். கண்ணீரால் அக் கடிதத்தை முழுக வைத்தான். அதனை மடித்துத் தன் சட்டைப் பையில் வைத்துக் கொண்டான்.

தாய் மூலம் தந்தைக்குத் தன் கருத்தை யறிவித்தான். வீர சேகரனுக்கு வெகுளித்தீ மூண்டது. "என்ன மூடத்தனம்? நமது அரச குடும்பத்தின் பெருமை எங்கே? சில்லரைக் கடைக் காரன் மகளின் சிறுமை எங்கே? சிங்கம் சுண்டெலியை மணப்பதா? இச் செய்தி உலகம் அறிந்தால் அரச வம்சத்திற்கே பழியல்லவா? இன்னும் ஒரு முறை இச் சொல் என் செவியில் விழக்கூடாது. மாபெரு மாட்சியுடைய என் மகன் மன்னவள் மகளை மணந்து மாண்புற வாழட்டும். வீரசேகரன் உடம்பில் உயிர் உள்ளவரை இதற்கு இணங்கமாட்டான். ஆகவே உன் மகனுக்கு திட்டவட்டமாக இக் காரியம் நடவாது என்றும் என் கருத்துக்கு மாருக நடந்தால் அவன் என் மகன் அல்லன் என்றும் கூறிவிடு" என்று கூறிக் கர்ஜித்தான்.

இதனை மறைவில் இருந்து கேட்ட குணசேகரன் நடுநடுங்கி விட்டான். வீரசேகரன் சினத்தை அவனுலே தாங்கமுடியா தல்லவா? மேலும் தந்தை; இதுவரை தந்தை சொல் தட்டாமல் நடந்தவன். அப்படியே உயிரற்ற உடம்புபோல் ஆனுன்.



ஆருத்துயரமுற்ருன். "மணந்தால் அவளை மணப்பது? இல்லை யேல் தன் வாழ்வை முடிப்பது" என்று எண்ணினுன். ஏங்கினுன்.

ஒருமுறை தனிமையில் பிதாவின் கால்மீது வீழ்ந்து அழு தான். வீரசேகரன் மனம் இளகியது. மகனே' உனக்கு என்ன வேண்டும்? கேள்" என்ருன். "அப்பா! வாழ்வு என்பது குலம் பணம் அழகு உயர்வு இவைகளில் அமையாது. அது அன்பில் அமைவது. தாங்கள்தான் எனக்கு முதல் தெய்வம். தங்கள் கருத்தை நான் ஒருபோதும் மீறி நடக்கமாட்டேன். நான் தங்கட்கு ஒரே மகன். நான் மகிழ்ச்சியாக வாழவேண்டுமானுல் அந்த உத்தம குணம் பொருந்திய ஏழைக் குலமகளைத் தாங்கள் மருமகளாக ஏற்றுக்கொள்ளவேண்டும். இந்த ஒரு வரந்தான் தங்களை நான் மன்ருடிக் கேட்பது" என்ருன்.

இப்போது வீரசேகரனுக்குக் கோபம் வரவில்லை. ஏன்? மகன் மீதுள்ள பாசம். "கண்ணே! என் வார்த்தையைக் கவனமாகக் கேள். நமது வீர குலத்தின் பெருமையைக் காப் பாற்ற வேண்டும். புலி பசித்தால் புல்லைத் தின்னுது. பெருங் குடும்பத்தில் பிறந்த நீ சிறுகுடும்பத்தில் பிறந்த ஒருத்தியை விரும்புவது சற்றும் பொருந்தாது. அதனை மறந்துவிடு. இளம் பிள்ளையாகிய நீ இப்போது என் சொல்லின் நுட்பத்தை யறியமுடியாது. ஆகவே நமது வீரக்குடும்பத்திற்கு ஏற்ப ஒரு அரசகுமாரியை நாடி உனக்கு மணம் புரிந்துவைப்பேன்" என்று கூறிவிட்டான்.

ஒரு நாள் பலவேசன் வீட்டிற்குக் குணசேகரன் வந்தான். அன்றும் அவளுடைய பாடலைக் கேட்டுப் பரவசம் அடைந்தான். தன் தந்தை தனது எண்ணத்தை மறுப்பதாகக் குறிப்பினுல் உணர்த்தினுன். இப்படி இரண்டு, மூன்று ஆண்டுகள் அகன்றன.

இராஜேந்திரபுரியை யாளுகின்ற வீரசேகரன் சிற்றரசன். மகேந்திரபுரியை யாளுகின்ற சக்கரவர்த்தியாகிய நீலாங்கவேந்த னுக்குக் கப்பங்கட்டுபவன். ஐந்து, ஆறு ஆண்டுகளாகக் கப்பங் கட்டாமையால் அவனுடைய சேவகர்கள் வந்து நெருக்கி வீர சேகரனைச் சிறையில் இட்டனர். தந்தைக்கு நேர்ந்த இன்னலைக் கண்டு இதயந் தளர்ந்தான் குணசேகரன். ஒன்றும் உணராது திகைத்தான்.

குணசேகரன் நேரே மகேந்திரபுரி சென்ருன். தனது பிதாவைச் சிறையிலிருந்து விடுவிக்குமாறும், சற்று நிதானமாகப் பகுதிப் பணத்தைச் சிறுகச் சிறுகக் கட்டிவிடுவதாகவும் சக்கர வர்த்திபால் முறையிட்டுக் கூறி வேண்டினுன். குணசேகர னுடைய சொல்லின் நயத்துக்கு உள்ளம் உருகிய நீலாங்க வேந்தன் வீரசேகரனை விடுதலை புரிந்தான். தந்தை மைந்த

னுடைய உதவியால் விடுதலை பெற்றது குறித்துப் பெரு மகிழ்ச்சி யுற்ருன். அந்த மகேந்திரபுரியில் ஒரு புறத்தில் தங்கி யிருந்தான்.

அரண்மனையில் நீலாங்கனுடைய பட்டமகிஷி நோய்வாய்ப் பட்டு உயிர் பிரியுந் தருணத்தை யடைந்தாள். நீலாங்க மன்னன் அவள் தலைப்புறம் இருந்து வேதனையுடன் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தான். உயிரினும் இனிய இளைய ராணியாகிய அவள் பிரிவு அவனைப் பெரிதும் வருத்தியது.

ராணி கணவனை மெல்லக் கண் திறந்து பார்த்தாள். அவன் கையைப் பிடித்துக் கண்களில் ஒத்திக்கொண்டாள். மெல்லிய குரலில் கூறுகின்ருள். "பெருமானே! என்னைக் கடவுளும், தாங் களும் சேர்ந்து மன்னிக்கவேண்டும். ஆத்ம சாந்திக்காக இப் போது இந்த ரகசியத்தை வெளியிடுகின்றேன். மூத்த ராணி மூன்று மாதக் குழந்தையை விடுத்து மாண்டனள். அந்தக் குழவி வளர்ந்து பெரியவளானல் என் வாழ்வு சிறக்காது என்ற தீய எண்ணத்தால் அதே உருவமுள்ள ஒரு குழந்தையைக் கொணர்ந்து மாண்டுவிட்டதாக சூழ்ச்சி செய்துவிட்டேன். நமது குலத்தின்கொழுந்தாகிய அத்தவமகள் ராஜேந்திரபுரிக்கு அருகில் உள்ள உதையபுரில் பலவேசன் என்றவறியவன் வீட்டில் வளர் கின்ருள். அவளை அழைத்து வந்து பட்டங்கட்டி இந்த அரசை நிலைநிறுத்தும். அப்படிச் செய்தால் என் பாவம் ஒரு அளவுக்குத் தேயும்" என்று கூறிக் கண் மூடிவிட்டாள். மன்னவனும் மற்றவ ரும் கேட்டு அதிசயமுற்ருர்கள். அவளுக்கு ஈமக்கடன் ஒரு புறம் நடந்தது. பட்டத்துயானை பட்டத்துக் குதிரை முதலிய பரிவாரம் சூழ சக்ரவர்த்தி பலவேசன் குடிசைக்கு முன் வந்தார். விஜயலட்சுமியைக் கண்டார். அவள் கரத்தில் உள்ள அம்ச ரேகையாலும் அவளைத் தன் மகளே என எண்ணினர். ஆனந்தக் கண்ணிரால் ஆட்டினர். மேள தாளத்துடன் அழைத்துக் கொண்டு சென்ருர்.

மகேந்திரபுரி சென்றதும் ஒரு குறிப்பிட்ட நாளில் விஜய லட்சுமிக்கு மகுடாபிஷேகம் நடந்தது. சொல்லமுடியாத சிறப் புடன் நிகழ்ந்தது. சிற்றரசர்கள் அனைவரும் வந்திருந்தார்கள். அந்தக் கூட்டத்தில் வீரசேகரனும் அவன் மகன் குணசேகரனும் ஒருபுறம் ஒதுங்கியிருந்தார்கள். குணசேகரனுக்குத் தன் கண் களை நம்பமுடியவில்லை. தான் காதலித்த கண்மணி இப்போது சக்ரவர்த்தினியாக விளங்குகின்ருள்.

வீரசேகரன் அவளை வணங்கி நிற்கின்ருன். எவளை இழிந்த வள் என்ருனே அவளை இப்போது இறைஞ்சுகின்ருன். மெல்லத் தந்தைபால் வந்து, "அப்பா! இந்த உத்தமியைத்தான் முன்னே நான் விரும்பியதும்; நீர் மறுத்தீரே; இன்று இவள் நாம் வணங்கத் தக்கவளாக இருக்கின்ருள். எல்லாம் எனையாளும் ஈசன் செயல்" என்ருன்.



"மகனே! நமது சிறுமை எங்கே? விஜயலட்சுமியின் பெருமை எங்கே? அக்கினியைப் பஞ்சு தீண்ட முடியுமா? அதுபோல் கப்பங் கட்டமாட்டாத சிற்றரசன் சிறுவனுகிய நீ அவளை விரும் பினல் அது நடக்கின்ற காரியமா? சும்மாயிரு; கிட்டாதாயின் வெட்டென மற. எட்டாத மரத்திற்கு ஏணிவைக்கக் கூடாது" என்ருன். முடிசூட்டு விழா வெகு சிறப்பாக நடந்தது. ஆடல் பாடல் விருந்து விழா எல்லாம் இனிது நிகழ்ந்தன. விஜயலட்சுமி கடைக்கண் பார்வையால் தன்னைக் காதலித்த குணசேகரனைப் பார்த்துக்கொண்டாள். அவன் அப்போது அவளுடைய ஏற்றத் தையும் தோற்றத்தையுங் கண்டு நாணினன்.

சில மாதங்கள் கடந்தன. தந்தையாகிய நீலாங்கன் "என் செல்வப்புதல்வியே! உனக்கு விருப்பமான ஒருவனை உனக்குத் திருமணஞ் செய்விக்க எண்ணுகின்றேன். எனக்கு வயது தளர்ந்துவிட்டது. ஆகவே ஒரு சிறந்த வரனை நீ நிச்சயிக்க வேண்டும்" என்ருன்.

விஜயலட்சுமி, "அப்பா! ராஜேந்திரபுரியை ஆளும் வீரசேகரவேந்தனுடைய புதல்வர் குணசேகரரை நான் விரும்பி யுள்ளேன். அவரை அழைத்து எனக்குத் திருமணம் புரிந்து ஆசீர்வதியுங்கள்" என்ருள்.

இதனைக் கேட்ட நீலாங்கன் நகைத்தான். "செல்வக் குமாரியே! உனது பெருமை மேருமலையனையது. வீரசேகரன் நம்மிடம் கப்பங் கட்டுகின்ற சிற்றரசன். மேலும் கப்பங் கட்ட மாட்டாது சிறையிற் கிடந்தவன். அவன் மகன் குணசேகரனு எனக்கு மருமகனுக வருவது? இது பொருந்தாது. வேண்டாம். வேறு நமது தகுதிக்கு ஏற்ற அரசகுமாரனை விரும்பு" என்ருன்.

"அப்பா! பெண்கள் கணவனை வரிப்பது ஒருமுறைதான். மறுமுறை கிடையாது. ஆட்டுக்குத் தோல் உரிப்பதும் ஒரு முறைதான். ஆகவே என் விருப்பத்தைத் தாங்கள் கெடுக்கக் கூடாது. நான் முருகன் திருக்கையில் இருக்கும் வேற்படை யறிய அவரை விரும்பியுள்ளேன். ஆகவே அவருக்கு என்னைத் திருமணம் புரிந்து வாழ்த்துவீர்" என்ருள்.

புதல்வியின் மொழியை அவரால் தடுக்க முடியவில்லை. வீரசேகரனை அழைத்தார். திருமண விஷயமாகக் கூறினர். வீரசேகரன் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தான். திருமணநாள் குறிப்பிடப்பட்டது. குணசேகரனுக்கும் விஜயலட்சுமிக்கும் சிறப்பாகத் திருமணம் நடந்தது. அந்தரங்கத்தில் கணவன் களிக்க விஜயலட்சுமி அந்த நாட்டக்குறிஞ்சியில் பாடலைப் பாடினுள். அப்போது குணசேகரன் தன்னையே மறந்துவிட்டான்.

முன்னே தமது பெருமைக்கு ஏற்றவள் அல்லள் என்று எண்ணிய அம் மடக்கொடி இப்போது தம்மின் பன்மடங்கு

உ
முருகா

# ஆடவல்லான்

[கஉ0-ம் பக்கத் தொடர்ச்சி]

இந்த நாதாந்த நடனத்தினையே சமயாதீதப் பழம் பொருளாகிய ஏகநாதன் தில்லைத் திருச்சிற்றம்பலத்துள் தனது நடராஜத் திரு வடிவத்தால் வெளியே விளக்கிக் காட்டுகின்றனன். நடராஜப் பெருமான் தன் ஆனந்த மேலீட்டினால் ஆன்மாக்களின் மீதுள்ள தன் கருணையே தனதுஅருள் திருமேனியாகக் கொண்டு, எஞ்ஞான்றும் இடையருது நின்று நிகழ்த்தும் அப் பொற்புறு நடனமே தில்லைத் திருநடனமாகும். பரசிவம் பராசத்தியை நோக்குதல் உயிர்கட்குச் சிருட்டியாதிய வினையும் பொருட்டே என வுணர்க. இதனையே "மாதொருபாகம் நோக்கி மன்னு சிற்றம்பலத்தே........ அற்புதத் தனிக் கூத்தாடும் நாதனுர்" என்று தெய்வச் சேக்கிழார் சுவாமிகள் கூறுகின்றனர்.

சிதாகாசமாகிய பரவெளியிலே பரம்பொருள் பரநாதத்தை எழுப்பி ஆடும் அவ்வாடலே ஆன்மாக்களுக்குத் தநுகரண புவன போகங்களைப் படைத்துக் கொடுத்தலோடு, முத்தியின்பத்தையும் வழங்குகின்றது. எனவே நாதாதீதமாகிய அந்த அருள் நடனம் உலக உயிர்கள் யாவும் உய்வதற்குக் காரணமாகும் என்பதையுணர்க. பரநாத தோற்றமே சிருட்டியாரம்பம்; அதன் ஒடுக்கமே

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

உயர்ந்தவளாக இருந்தும் தம்மை மதித்து மணந்துகொண்ட அவள் பெருமிதத்தை நினைத்து வீரசேகரனும் குணசேகரனும் அவளைப் பெண் தெய்வமாகவே பேணி மதித்தார்கள்.

விஜயலட்சுமி தனது நாட்டில் எங்கும் இசை மன்றங்களை நிறுவினுள். இசைவாணர்களுக்கு நல்ல ஆதரவு தந்தாள். எல்லோரையும் இசையுலகில் உலாவவிடுத்தாள். இசைமயமாகவே நாட்டை யலங்கரித்தாள். இசை நுணுக்கத்தினுல் பல நோய்களை நீக்கவும், இசை விருந்தால் கொடிய விலங்குகளை அடக்கவும், இசையமுதால் பகைவரைச் சாதுவாக்கவும் பயிற்றுவித்தாள்.

இவ்வாறு விஜயலட்சுமியின் புகழ் உலகமெங்கும் பரவியது. தன் அன்புக்குரிய செல்வி விஜயலட்சுமியின் பெருமையைக் கண்டு அவளுடைய வாழ்வு சிறக்கவேண்டும் என்று முருகனை வேண்டிய அவளுடைய குருநாதர் ஆனந்தவாரியில் அழுந்தினுர்.

---



சங்காரம். இத் தத்துவத்தைத் தெரிவிக்க வந்தது திருக்கோயிலில் உள்ள பள்ளியறை. பரசிவம் ஐந்தொழில் நிகழத் தன்னிற் பிரிவிலாத பராசக்தியை நோக்குதல் என்ற உண்மையை உலகம் உணர்ந்து உய்யும் பொருட்டே அந்த அமைப்பு என்பதைக் கூர்த்த மதியினர் உணர்வர்.

அன்றியும், நடராஜ வடிவம் ஐம்பெருந் தொழில்களைக் காட்டுவதுமன்றி, இவ்வைம்பெருந் தொழிலுக்கும் அதீதமாயுள்ள பேரின்ப நிலையையும் குறிக்கும்; சிவபரம்பொருள் கேவல திசையில் இருந்த ஆன்மாக்களுக்குத் தநுகரணுதிகளைக் கொடுத்தல் **தூல நடனம்** எனப்படும்; அது ஆன்மாக்களுக்குப் பேத்த திசை அறிவிக்குந் தொழில் **அதிசூக்கும நடனம்** எனப்படும். ஆன்மாக்கள் பந்தத்தினின்றும் விடுபட்ட முத்த திசையில் அநுபவப் பேறு **பரநடனம்** அல்லது **ஞானநடனம்** எனப்படும்.

எனவே ஆனந்தத் தாண்டவம் பஞ்சகிருத்தியத்தை மாத்திரம் காட்டுவதன்று; அது நின்மலதுரிய நிலையில் உண்டாகும் அருள் விளக்கத்தையுங் காட்டி, அதற்குப்பின் உண்டாகும் துரியாதீதத்துச் சிவபோக ஆநந்த நிலையையுங் காட்டுவதாகும். மெய்ஞ்ஞானமாகிய அருள்விளக்கமே மெய்யுணர்வாகும்.

> ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
> மெய்யுணர் வில்லா தவர்க்கு.

என்பார் திருவள்ளுவர்.

இந்த மெய்ஞ்ஞான அருள் விளக்கத்துக்குப்பின் நிகழா நிற்குந் திருக்கூத்தே சிவபோகமாகும். இதனைச் சேக்கிழாரன்றி வேறு யாரால் விளக்க முடியும்? சிவயோக சிகாமணியாகிய திருமூல நாயனுரது அநுபவப் பேற்றைக் கூறுமிடத்து இதனைக் கூறுகின்ருர்.

> எவ்வுலகும் உய்ய எடுத்தருளிய சேவடியாரைச்
> செவ்விய அன்புற வணங்கிச் சிந்தை களிவரத்திளைத்து
> வவ்விய மெய்யுணர் வின்கண் வரும் ஆனந்தக் கூத்தை
> அவ்வியல்பிற் கும்பிட்டங் காராமை யமர்ந்திருந்தார்,

சிவபோகவிளைவாம் திருக்கூத்தைக் கண்டு திளைத்தசித்தருள் ஒருவராகிய திருமூல நாயனுர் தமது திருமந்திரத்தில் இப்பேரின்பத் திருநடனத்தின் உட்பொருளை மிகவும் சிறப்பித்து விளக்கியருளினுர்.

பரம்பொருளாகிய சிவம் ஆன்மாக்களின்பால் வைத்துள்ள கருணையே தமது உருவாகக் கொண்டு பராபரையின் திருமுன் ஆனந்தத் திருக்கூத்தை இயற்றுகின்ருர் என்ற தத்துவத்தைக் கூறுகின்ருர்.

அண்டங்கள் ஏழினுக் கப்புறத் தப்பான்
உண்டென் றசக்தி சதாசிவத் துச்சிமேல்
கண்டங் கரியான் கருணைத் திருவுருக்
கொண்டங் குமைகாணக் கூத்துகந்தானே,

அப்பரானந்தக் கூத்து நிகழ்வதற்குரிய இடம் பேரின்ப நிலையாகிய துரியமே என்பதைக் கூறுகின்றார்.

தெற்கு வடக்குக் கிழக்கு மேற் குச்சியில்
அற்புத மானதோர் அஞ்சு முகத்திலும்
ஒப்பில் பேரின்பத் துபய உபயத்துள்
தற்பரன் நின்று தனிநடஞ் செய்யுமே.

இப்பேரின்ப உபயத்துள் நிகழ்வதாகிய நடனத்திற்கு அம்பலமாக அமைந்துள்ளது பராசக்தியேயாம் என்பதைக் கூறுகின்றார்.

அண்டங்கள் ஓரேழும் அம்பொற்பதியாகப்
பண்டையா காசங்கள் ஐந்தும் பதியாகத்
தெண்டினிற் சக்தி திருஅம்பலமாகக்
கொண்டு பரஞ்சோதி கூத்துகந்தானே,

அத் திருக்கூத்தைக் கண்கூடாகக் காணவல்லார் மாயை கடந்த மாதவரேயாகும்.

தீமுதல் ஐந்தும் திசை எட்டும் கீழ்மேலும்
ஆயும் அறிவினுக் கப்புறம் ஆனந்தம்
மாயைமா மாயை கடந்து நின்றார் காண
நாயகன் நின்று நடஞ் செய்யுமாறே.

அப் பரமானந்தக் கூத்தைக் காணுந்தோறும் காணுந்தோறும் புளியைக் கண்டார்க்கு நாவில் நீர் ஊறுவதுபோல் உள்ளத்தே ஆனந்த அருவிபாயும்; சிவபோக விளைவே அத்திரு நடனம்.

புளிக்கண்டவர்க்குப் புனலூறு மாப்போல்
களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்
அளிக்கும் அருட்கண்ணீர் சோர் நெஞ்சுருக்கும்
ஒளிக்குள் ஆனந்தத் தமுதூறும் உள்ளத்தே,

நாதாந்த நிலையிலே நின்று நம்பன் நடிக்கின்றதனாலே அண்ட சராசரம் யாவும் ஆடுகின்றன.

தேவர்சுரர் நரர் சித்தர் வித்தியாதரர்
மூவர்கள் ஆதியின் முப்பத்து மூவர்கள்
தாபதர் சத்தர் சமயஞ் சராசரம்
யாவையும் ஆடிடும் எம்மிறை யாடவே.



மேலும் சிவபோகமாகிய முத்தி முடிவைக் குறித்தலோடு, சிவபரம் பொருளே ஆக்கல் அளித்தல் அழித்தல் மறைத்தல் அருளல்என்ற ஐந்தொழில்களையும் அயன் அரி உருத்திரன் மகேசன் சதாசிவன் என்னும் ஐவகை மூர்த்திகளின் வழியாகச் செய்கின்றது என்பதைக்காட்டி நிற்குந் தன்மை தன்னிடந் தங்குமாறு அமைந்துள்ள திருவுருவம் நடராஜ வடிவமாகும்.

அவருடைய திருக்கரத்தில் விளங்கும் உடுக்கை (டமருகம்)
யினால் உலக சிருட்டியையும், அபயகரத்தினால் காத்தலையும்,
நெருப்பை ஏந்திய திருக்கரத்தினால் அழித்தலையும், ஊன்றிய
திருவடியால் மறைத்தலையும், தூக்கிய திருவடியால் ஆன்மாக்
களுக்கு அருளலையும் இத்திருவுருவம் காட்டுகின்றது.

இதனை "உண்மைவிளக்கம்" என்ற சித்தாந்த நூலாசிரியர் மனவாசகங் கடந்தார் கூறுகின்றார்.

தோற்றந் துடியதனில் தோயுந் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உள்ள திரோதம் முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

அரன்துடிதோற்றம் அமைத்தல் திதியாம்
அரன்அங்கி தன்னில் அறையிற் சங்காரம்
அரனுற் றணைப்பில் அமருந்தி ரோதாயி
அரனடி யென்றும் அநுக்கிரகம் என்னே. —திருமந்திரம்.

தாண்டவஞ் செய்யவல்ல ஆண்டவன் மாயையை எடுத்து அப்படி உடுக்கையினால் உதறுகின்றார். ஆன்மாக்களின் வல்வினைகளை-சஞ்சிதத்தைத் தமது திருக்கரத்தில் உள்ள நெருப்பில் சுட்டுச் சாம்பலாக்குகின்றார். ஆணவமாகிய முயலகனை மேலெழா வண்ணம் கிரியா சத்தியாகிய வலப்பாதத்தினால் மிதித்திருக்கின்றார். ஆனந்த அநுபவத்தை ஞான சத்தியாகிய தூக்கிய திருவடியினால்தந்து ஆன்மாக்களைப் பேரின்பசாகரத்தில் அழுத்துகின்றார். இதுவே அவர் செய்யும் பரத நாட்டியத்தின் உட்பொருள்.

மாயை தனை உதறி வல்வினையைச் சுட்டுமலஞ்
சாய அமுக்கிஅருள் தான்எடுத்து—நேயத்தால்
ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்
தானெந்தை யார்பரதந் தான். — உண்மை விளக்கம்.

இனி நடராஜ வடிவம் பஞ்சாட்சரத்தால் அமைந்ததும் ஆகும். அதனை அறிந்து தியானிப்பதும் ஞான சாதகர்களுக்கு கூறப்பட்ட முறைகளுள் ஒன்றாகும்.

ஆடும் படிகேள்நல் அம்பலத்தான் ஐயனே
நாடுந் திருவடியி லேநகரம்—கூடும்
மகரம் உதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார்.

இதன் பொருள்:

''மாணுக்கனே! பொன்னம்பலமுடையான் திருநடனஞ் செய்கின்ற முறையைச் சொல்லுகின்றோம்; கேட்கக் கடவாயாக.

| | |
|---|---|
| நின்ற பாதத்திலே | ந |
| திருவுந்தியிலே | ம |
| திருத்தோளிலே | சி |
| திருமுகத்திலே | வா |
| திருமுடியிலே | ய |

இந்தவண்ணம் எம்பிரான் ஐந்தெழுத்தையும் உருவமாகக் கொண்டு ஆடுகின்றான் என்று அறிக. இது தூலபஞ்சாக்கரம்.

அன்றியும் சூக்கும பஞ்சாக்கர வகையாலும் அப் பரமனது தாண்டவ வுருவம் பேசப்பெறும்.

சேர்க்குந் துடிசிகரம் சிக்கெனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம்—பார்க்கிலிறைக்
கங்கி நகரம் அடிக்கீழ் முயலகனார்
தங்கு மகரமது தான்.

மருவுந் துடியுடன் மன்னிய வீச்சு
மருவிய அப்பும் அனலுடன் கையும்
கருவின் மிதித்த கமலப் பதமும்
உருவில் சிவாய நமஎன ஓதே.

| | |
|---|---|
| ஒலிக்கின்ற உடுக்கை | சி |
| வீசிய கரம் | |
| அமைத்த கரம் | வ |
| அனலேந்திய கரம் | ய |
| முயலகனைமிதித்த பதம் | ந |
| | ம |

இத்தகைய அருளானந்த அற்புதத் திருக்கூத்தை உள் முகத்தில் நாடி அலைகின்ற மனத்தை ஒடுக்கி உள்ளுணர்வு பெற்று உவக்கவேண்டும் என்கின்றார் திருமூலர்.

ஆடிய காலும் அதிற்சிலம் போசையும்
பாடிய பாட்டும் பலவான நட்டமும்
கூடிய கோலம் குருபரன் கொண்டாடத்
தேடியு(ள்)ளே கண்டு தீர்ந்தற்றவாறே.



இதுகாறும் கூறிய விளக்கத்தினால் நாதாந்த நடன மென்னும், ஆனந்தக் கூத்தால் உலகில் காணப்படும் அசைவுகள் யாவும் அவன் தன் அருளாலே செய்யும் ஆணையினாலே நிகழ்கின்றன என்பதும், அத்தகைய நிகழ்ச்சியானது ஆன்மாக்கள் தம்முடைய இன்ப துன்பங்கட்குக் காரணமான பந்தத்தினின்றும் நீங்கிப் பேராவியற்கைத்தாகிய முத்தியின்பத்தைப் பெறும் பொருட்டே நிகழ்கின்றதென்பதும், அத்திருக் கூத்து நடைபெறுமிடம் தூலமாகிய திருச்சிற்றம்பலமே யன்றி, உலகமாகிய திருக்கோயிலும், சூக்குமமாகிய தகராகாசம் எனப்படும் அன்பர்களது இதய கமலமும் ஆகும் என்பதும் இனிது புலப்படும்.

இத்தகைய தத்துவங்களைத் தெளிவுறக் காட்டுந் திருவுருவம் நடராஜ வடிவினையன்றி வேறு ஒன்றும் இல்லை. இதனை நமக்கு உணர்த்திய ஆன்றோர்களின் மதி நலம் துதி நலம் உடையதாகும். நடராஜ வடிவினைச் சூழ்ந்திருக்குந் திருவாசி ஓங்காரமாகும். இத்தகைய திருவுருவம் சிறப்பாக விளங்குவதனால் தில்லையைத் தெரிசித்த மாத்திரத்தில் முத்தி யென முந்தையோர் மொழிந்தனர். அதாவது நடராஜ வுருவத்தால் விளங்கும் சிவ போக நிலையைத் தரிசித்தமாத்திரத்தில் முத்தியுறும் என்பது போதரும்.

அதனால் இத் தில்லை நடராஜ வுருவினைக் காணும் வாய்ப்பு கிடைக்குமாயின் மண்ணுலகில் மனிதப் பிறப்பு மற்றொருமுறை வந்தாலும் குறைவில்லை என்கின்றார் அப்பர்மூர்த்திகள்.

குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்
மனிதப் பிறவியும் வேண்டுவதே இந்த மானிலத்தே.

தன்பால் வந்த அடியார்களை ''என்று வந்தாய்?'' என்று கருணையுடன் கேட்பது போலவும் இருக்கின்றது தென்பால் நோக்கியாடும் தில்லைப்பரமனது அபய கரத்தின் குறிப்பு.

ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை
கன்றிய காலனைக் காலால் கடிந்தான் அடியவர்க்காச்
சென்று தொழுமின்கள் தில்லையுள் சிற்றம்பலத்து நட்டம்
''என்று வந்தாய்?'' எனும் எம்பெருமான்றன் திருக்குறிப்பே.

''இனி எல்லாமாய் நின்ற எம்பிரானாகிய அம்பலக்கூத்தனைத் தினையளவு நேரமாகிலும் நான் மறந்து உய்யமாட்டேன்'' என்கின்றார் அப்பர்.

பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்
நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனை
தினைத்தனைப் பொழுதும் மறந்துய்வனோ.

உ

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்

" குருப்பு கழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுங்
திருப்பு கழைக் கேளீர் தினம் "

மலர் 21 | துன்முகி ஆண்டு ஐப்பசித் திங்கள் அக்டோபர்-1956 | இதழ் 7

## திருப்புகழ்

திருச்சேந்தூர்

தண்டே னுண்டே வண்டார் வஞ்சேர்
தண்டார் மஞ்சுக் குழல்மாஞர்
தம்பா லன்பார் நெஞ்சே கொண்டே
சம்பா வஞ்சொற் றடிநாயேன்

மண்டோ யந்தீ மென்கால் விண்டோய்
வண்கா யம்பொய்க் குடில்வேருய்
வன்கா னம்போ யண்டா முன்பே
வந்தே நின்பொற் கழல்தாராய்

கொண்டா டும்பேர் கொண்டா டுஞ்சூர்
கொன்ருய் வென்றிக் குமரேசா
கொங்கார் வண்டார் பண்பா டுஞ்சீர்
குன்ரு மன்றற் கிரியோனே

கண்டா கும்பா லுண்டா யண்டார்
கண்டா கந்தப் புயவேளே
கந்தா மைந்தா ரந்தோள் மைந்தா
கந்தா செந்திற் பெருமாளே.

## பதவுரை

கொண்டாடும் பேர்=தன்னைக் கொண்டாடிப் புகழ்கின்றவர்களை! கொண்டாடும் சூர் கொன்ருய்=மகிழ்ந்து கொண்டாடுகின்ற சூர பன்மனைக் கொன்றவரே! வென்றி குமர ஈசா=வெற்றியையுடைய குமாரக் கடவுளாகிய தலைவரே! கொங்கு ஆர் வண்டு=பூந்தாதுகளில் நிறைந்துள்ள வண்டுகள், ஆர்பண்பாடும்=அரிய பண்களைப் பாடுகின்ற' சீர் குன்ரு=சிறப்பு குறையாத, மன்றல் கிரியோனே=திருமணஞ் செய்து கொண்ட மலையாகிய வள்ளி மலையில் வாழ்பவரே! கண்டு ஆகும் பால் உண்டாய்=கற்கண்டு போன்ற (உமையம்மையின்) திரு முலைப்பால் உண்டவரே! அண்டார் கண்டா=பகைவரைக் கண்டித்தவரே! கந்த புயவேளே=நறுமணம் நிறைந்த புயாசலத்தையுடையவரே! கந்து ஆம் மைந்து ஆர்அம் தோள் மைந்தா=கம்பத்துக்கு நிகரான வலிமை நிறைந்த அழகிய தோளையுடைய வீரரே! கந்தா=கந்தக்கடவுளே! பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! தண்தேன் உண்டே=குளிர்ந்த தேனைப்பருகி, வண்டு ஆர்வம் சேர்=வண்டுகள் அன்புடன் மொய்க்கின்ற, தண்தார் மஞ்சு குழல் மானுர் தம்பால்=குளிர்ந்த பூமாலை சூடிய மேகம் பேன்ற கூந்தலையுடைய மாதர்களிடம், அன்பு ஆர் நெஞ்சே கொண்டே=அன்புநிறைந்த மனத்தைக் கொண்டு, சம்பாவம் சொற்று=நிகழ்ச்சிகளை யெல்லாம் பேசுகின்ற, அடிநாயேன்=அடிமையாகிய நாயினேன், மண்=மண்ணும், தோயம்=தண்ணீரும், தீ=நெருப்பும், மென்கால்=மெல்லிய காற்றும், விண்=வெளியும், தோய்வண் காயம்=தோய்ந்துள்ள வளங் கொண்ட உடம்பாகிய, பொய் குடில்வேருய்=பொய்யாகிய சரீரத்தினின் றும் உயிர் நீங்கி, வன்கானம் போய்=கொடுங் கானகம் போய், அண்டா முன்பே=நெருங்கா முன்னர், வந்தே நின் பொன் கழல் தாராய்=அடியேன் முன் வந்தருளி தேவரீருடைய அழகிய திருவடிமலரைத் தந்தருளுவீர்.

## பொழிப்புரை

தன்னைப் புகழ்கின்றவர்களை ஆதரித்து மகிழ்கின்ற சூர பன்மனைக் கொன்றவரே! வேற்றி நிறைந்த குமாரக்கடவுளே! பூ மலர்களில் நிறைந்த வண்டுகள் அருமையான பண்களைப் பாடுகின்ற சிறப்பு குறையாத வெள்ளிமலையில் எழுந்தருளியிருப்பவரே! கற்கண்டுபோல் இனிமை நிறைந்த அம்பிகையின் திருமுலைப்பாலை உண்டவரே! பகைவரைக் கண்டித்தவரே! வாசனை தங்கிய புயத்தையுடைய உபகாரியே! தூண்போன்ற வலிமை நிறைந்த அழகிய தோள்களையுடைய இளம்பூரணரே! கந்தக் கடவுளே! பெருமிதமுடையவரே! குளிர்ந்த தேனையுண்டு வண்டுகள் அன்பு செய்கின்ற குளிர்ந்த மலர்மாலை சூடி மேகம் போல இருக்குங் கூந்தலையுடைய பொதுமாதர்களிடம் ஆசைவைத்த மனத்தையுடையவனுய் அவர்களுடைய



சேயலைப் பாராட்டிப் பேசுகின்ற நாயேனுகிய அடியேன், மண், நீர், நெருப்பு, காற்று, வெளி என்ற ஐம்பூத சேர்க்கையாலாகிய இப் பொய்யாகிய உடம்பிலிருந்து உயிர்நீங்கி, சுடுகாடு சென்று சேரா முன்னம் தேவரீர் எளியேன்முன் எழுந்தருளி அழகிய அடிமலரைத் தந்தருளுவீர்.

## விரிவுரை

**தண்டேனுண்டே வண்டு :—**

தண் தேன் என்று பிரித்துக் கொள்க; குளிர்ந்த தேன்; குளிர்ந்த மலர்களிலிருந்து வண்டுகள் தமது திறமையால் மிகவும் பாடுபட்டு சிறிது சிறிதாக எடுத்துக் கொண்டு வந்து சேகரிப்பது தேன். வண்டு இல்லையேல் தேன் இல்லை.

தாங்கள் உண்ணுமலும் ஓய்ந்து சிறிதுநேரங்கூட இருக்காமலும், உழைத்து உழைத்துத் தேனைக் கோணர்ந்து சேர்க்கின்றன தேனீக்கள். அதனைப் பிறர் அபகரித்துக்கொள்ளுகின்றனர்.

உண்ணுமலும் உடுக்காமலும் பிறருக்குக் கோடுக்காமலும், சேர்த்து வைக்கின்ற லோபியினுடைய போருளும் பிறரால் கவரப்படும்.

> " வைத்தீட்டி ஞரிழப்பர் வான்தோய் மலைநாட
> உய்த்தீட்டுந் தேனீக் கரி. "

என்பது நாலடி.

**தண்டார் மஞ்சுக் குழல் மாஞர்:—**

வண்டுகள் மகிழ்ந்து மோய்க்கின்ற குளிர்ந்த மலர்மாலைகளை வகை வகையாகக் கட்டித் தமது கூந்தலில் போதுமகளிர் சூடிக் கோள்வார்கள்.

அந்தக் கூந்தல் கருமை நிறமாக இருப்பதனுல் மேகம்போல் அழகாக இருக்கும்.

மஞ்சு—மேகம்.

மாஞர்—மான்போன்றவர்கள்.

தண்டார்—தண் தார் எனப் பதம் பிரித்துக்கோள்க.

**தம்பாலன்பார் நேஞ்சே கோண்டே:—**

மனிதர்களாகிய நாம் இந்த மனித உடம்பை நமக்குத் தந்த இறைவனிடம் அன்புவைக்க வேண்டும். இடையருத இன்பத்தை வழங்குபவன் இறைவன். அத்தகைய எம்பெருமானிடம் அன்பு வைக்காது. இன்பம்போல் தோன்றும் துன்பத்தைத் தரும் போதுமகளிர்பால் அன்புவைக்கின்ற மனதைக் கோள்கின்றனர். அதனல் எத்தனை எத்தனைக் கேடுகளை யடைகின்றனர்.

**சம்பாவஞ் சோற்றடி நாயேன்:—**

சம்பவம்—என்பது சம்பாவம் என வந்தது. சம்பவம்—நிகழ்ச்சி. போதுமகளிருடைய செயல்களைக் குறித்து அவர்பால் மயல் கொண்டோர் வியந்து நயந்து பேசி இன்புறுவர். அதிலே அவர்கட்கு ஒரு மகிழ்ச்சி.

இறைவனுடைய திருநாமங்களைச் சொல்வதற்காகவே இந்த நா அமைந்துளது.

கற்றுக் கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடையானுளன் யாமுளம்
எற்றுக்கோ நமனால் முனி வுண்பதே.

**மண்டோயந்தீ மேன்கால் விண்டோய்**
**வண்காயம் போய்க் குடில்:—**

இந்தவுடம்பு மண் முதலிய ஐம்பெரும் பூதங்களினாலாகியது. பஞ்ச பூதபரிணாம சரீரம். ஐம்பெரும் பூதங்களின் சேர்க்கையால் இது வந்துளது. நிலைபேறில்லாதது. நீர்மேற் குமிழிக்கு நிகரானது.

'ஐந்துவிதமாகின்ற பூத பேதத்தினால்
ஆகின்ற யாக்கை நீர்மேல்
அமிழ்கின்ற குமிழி'

என்கின்றார் தாயுமானார்.

ககனமு மநிலமும் அனல்புனல் நிலமமை
கள்ளப் புலால் க்ருமிவீடு.

என்ற திருப்புகழாலும் அறிக.

போய்யான உடம்பை மெய் என்று நம்பி, தவநெறி சேராது அவநெறி சேர்ந்து, காமதேனுவின் பாலைக் கமரில் கோட்டியதுபோல், தமது நேரத்தை வீணாக்கி மாநுடர் வறிதே கெடுகின்றனர்; அந்தோ! பரிதாபம்,

பொய் விளக்கப் புகுகின்றீர் போது கழிக்கின்றீர்
புலைகொலைகள் புரிகின்றீர் கலகல என்கின்றீர்
ஐவிளக்கு மூப்பு மரணாதிகளை நினைத்தால்
அடிவயிற்றை முருக்காதோ கொடிய முயற்றுலகீர்
கைவிளக்குப் பிடித்தொருபாழ்ங் கிணற்றில் விழுகின்ற
களியரெனக் களிக்கின்றீர் கருத்திருந்துங் கருதீர்
மெய்விளக்கும் எனது தந்தை வருகின்ற தருணம்
மேவியதிங் கடைவீரேல் ஆவிபெறுவீரே.



என்று உலகினரை நோக்கி அருளால் பாடுகின்றார் இராமலிங்க அடிகளார்.

பொய்க்கூடு கொண்டு புலம்புவனோ எம்மிறைவர்
மெய்க்கூடு சென்று விளம்பிவா பைங்கிளியே.
—தாயுமானார்.

**வன்கானம் போயண்டா முன்பே:—**

இந்த வுடம்பு இறைவனை யடைவதற்காக வந்தது. நானே வரவில்லை; முன்செய்த மாதவத்தின்பயனாய் இறைவன் தரவந்தது. இந்த உடம்பாலாய பயன் இருவினைகளின் வேரறுத்து மும்மலத் தொடர்பையும் அகற்றி அருளின் தொடர்பு கொண்டு இறைவனுடன் இரண்டறக் கலத்தலேயாம்.

அந்த முயற்சியில் ஈடுபடாதார் சேத்து சேத்துப் பிறப்பதே தொழிலாகியுழல்வர். "மண்ணுண்டு போகுது ஐயோ! கெடுவீர் இந்த மானுடமே" என்று வருந்துகின்றார் பட்டினத்து சுவாமிகள்.

ஆகவே இந்த உடம்பு அழியுமுன் நற்கதிக்குரிய நலத்தைத் தேடிவிட வேண்டும். அதிலே அயராத முயற்சியிருக்க வேண்டும்.

"கைவைத்த வீடு குலையுமுன்னே வந்து காத்தருளே"

என்ற அருணகிரிநாதரது கந்தரலங்காரத்தை நினைந்த எந்தக் கன் மனந்தான் கரையாது?

"காதலார் மைந்தருந் தாயராருஞ் சுடு
கானமே பின்தொடர்ந் தலறுமுன்
சூலம்வாள் தண்டு செஞ் சேவல் கோதண்டமும்
சூடு தோளுந் தடந் திருமார்பும்
தூயதாள் தண்டையுங் காண ஆர்வஞ் செயுந்
தோகைமேல் கொண்டுமுன் வரவேணும்"

என்ற அரிய திருப்புகழும் ஈண்டு நினைவு கூரற்பாலது.

**வந்தே நின்போற் கழல்தாராய்:—**

"முருகா! அடியேனுடைய உடம்பை விட்டு உயிர் போகுமுன் சிறியேன்முன் தேவரீர் எழுந்தருளி வந்து எளியேனுக்கு உமது பொன்னார் திருவடியைத் தந்து காத்தருள வேண்டும்" என்று அருணகிரிநாதர் உள்ளம் உருகி முறையிடுகின்றார். இல்லை; இப்படி முறையிடுமாறு நம்மைத் தூண்டுகின்றார் அந்தவழியைக் காட்டுகின்றார். அவர் பரகதிக்குச் சிறந்த வழிகாட்டி.

**கோண்டாடும்பேர் கோண்டாடுஞ் சூர் கோன்ருய்:—**

தன்னை யார் யார் கோண்டாடுகின்ருர்களோ அவர்களை யெல்லாம் மகிழ்ந்து ஆதரிப்பான் சூரபன்மன். தன்னைக் கோண்டாடுவதற்கேன்றே பலரை வைத்திருப்பர் சிலர். இன்றுங் காணலாம்! சிலருக்குத் தன்னைக் கோண்டாடினுல் அதில் ஒரு பெருமகிழ்ச்சி. அறிஞர்கள் தன்னை யாராவது புகழ்ந்தால் வருந்துவர் நாணுவர்.

மாலை நேரத்தில் மரத்தின் இலைகள் தலைகவிழ்ந்திருந்தன. அதனைக்கண்டு கூறவந்தார் புலவர். "தன்னைப் புகழக்கேட்ட மதிநலம் படைத்த மாண்புடைய ஒருவன் தலை கவிழ்ந்திருப்பது போல் இருக்கின்றன" என்கின்ருர்.

**தம்புகழ் கேட்டார் போல் தலை சாய்ந்து மரந் துஞ்ச"**

—கலித்தோகை.

**சூர் கோன்ருய்:—**

சூர்—துன்பம். துன்பத்தைச் செய்கின்றவன் சூரபன்மன்; அதனுல் சூர் எனப்பட்டனன். இவன் 108 யுகங்கள் அமரர்கட்கு அலக்கண் புரிந்தான். அதனுல் அவனை மாய்த்தனர் குமாரக் கடவுள். இது மறக்கருணை யெனவுணர்க. குற்றஞ் செய்கின்ற மகனைத் தாய் அல்லது தந்தை அடிக்கின்றனர். மகன் மீது பகை காரணமாகவா அடிக்கின்றனர்? இல்லை. அவன் திருந்தி உய்ய வேண்டும் என்ற கருணையினுலேயே தண்டிக்கின்றனர். அது போல் உயிருக்குத் தந்தையாகிய இறைவன் குற்றம் புரிந் தோரை உய்யும்போருட்டுத் தண்டிக்கின்றனன். போற்றுனர்க்கு அறக் கருணையும், அல்லார்க்கு மறக்கருணையும் புரிந்து ஆட்கோள்வது இறைவனுடைய இயல்பு.

**கோங்கார் வண்டார் பண்பாடும் :—**

கோங்கு ஆர் வண்டு ஆர் பண் பாடும் எனப் பதப் பிரிவு செய்க.

கோங்கு - வாசனை. அது தானியாகு பெயராக இங்கே மலரைக் குறிக்கின்றது. "கோங்கு தேர் வாழ்க்கை யஞ் சிறைத்தும்பி" என இறைவன் தருமிக்குப் பாடித்தந்த பாடலாலும் அறிக.

ஆர்—நிறைதல்.

வண்டு - ஆர் - இங்கே ஆர் என்ற சோல்லுக்கு அருமை பொன்பது போருள்.

மலர்களில் நிறைந்த வண்டுகள் தேனையுண்ணும்போருட்டு அரிய பண்களைப்பாடும். என்? மலர் விரியும் போருட்டு. நல்ல



பண்ணைக் கேட்டவுடன் அரும்பு மலர்கின்றது. இசைக்கு அத் துணை வலிமையுளது. இன்னும் பிச்சை கேட்க வருகின்ற யாசகர்கள் ஏதாவது ஒரு பாடலைப் பாடிக்கோண்டே வருவது கண்கூடு. பாடல் கேட்டவர் பரிசில் தருவர். அதுபோல் வண்டு பாடும் பண்ணுக்குப் பரிசிலாக மலர் தேன் தருகின்றது.

**சீர்குன்ரு மன்றல் கிரியோனே :—**

மன்றல் கிரி என்பது வள்ளிமலை. வள்ளியைப் பெருமான் மணந்துகோண்டதனுல் அப்பெயர் பெற்றது. வள்ளிமலை மிகுந்த மகிமை வாய்ந்தது. உலக மாதா இங்கு அவதரித்து வளர்ந்தனர்; வேதங்களும், முனிவரும் மூவருந் தேவருந் தேடிக் காணுத திருமுருகன் இம்மலையைத் தேடி வந்து, மறை கமழும் மலரடி நோவ இம்மலையில் நடந்தான் எனில் இம்மலையின் பெருமை நம்மால் இத்தன்மைத்து என்று நினைக்கவும், சோல்லவும் தரமோ?

**" வீடும் சுரர்மாமுடி வேதமும் வெங்**
**காடும் புனமுங் கமழுங் கழலே "**

என்ற அநுபூதியின் திருவாக்கால் இவ் வள்ளிமலையின் பெருமையையுணர்க.

இம்மலை தோண்டை நாட்டில் (வட ஆர்க்காடு மாவட்டத்தில்) திருவல்லம் (புகை வண்டி நிலையம் உண்டு) என்ற திருத் தலத்தின் வடக்கே 5 கல் தோலைவில் விளங்குகின்றது. முருகன் அடியார்கள் அனைவரும் வாழ்நாளில் ஒருமுறையாவது அவசியம் சென்று தரிசிக்க வேண்டும். இல்லையேல் வள்ளி யம்மையின் திருவருளை எங்ஙனம் பெறமுடியும்? தங்கள் குரு நாதர் பிறந்த தலத்தைக்காண இஸ்லாமிய அன்பர்கள் பல்லாயிரம் மைல் கடந்து பாலைவனம் வழியே போருள் நிரம்பச் சேலவழித்துப் போகின்ருர்கள். முருகன் அடியார்கள் நம் நாட்டில் எளிதாகப் போகக் கூடிய வள்ளிமலை சென்று இயற்கையாகக் குகைக் கோயிலில் வற்ருத கருணைமூர்த்தியாக எழுந்தருளியுள்ள வள்ளி கல்யாண வரதனைச் சேவிக்க வேண்டாமா?

திருவல்லம் சென்னையிலிருந்து பெங்களூர் போகும் இருப்புப் பாதையில் காட்பாடிக்கு அருகில் உள்ளது. திருவல்லம் தேவார, திருப்புகழ், பெரிய புராணப் பாடல்கள் பெற்ற அரியதலம். அதன் அருகில் வள்ளிமலை இருப்பதனுல் போகும் வழியில் திருவல்லத் தைத் தரிசிக்கலாம். ஒரு கல்லில் இரு மாங்காய்களை வீழ்த்தியது போல், ஒரு முயற்சியில் இரு தலங்களைத் தரிசித்த நன்மை கிடைக்கும். நீவா நதிக்கரையில் திருவல்லம் என்னும் தலம் இருக்கின்றது. வில்வவனநாதர் என்பது சுவாமி பேர். அருமை யான ஆலயம். அன்பர்கள் அனைவரும் திருவல்லம் தரிசித்து, அதனைக் கடந்து அம்மை அவதரித்த அரிய தலமாகிய வள்ளி மலையைச் சேவித்து அருள் நலத்தைப் பெறுவார்களாக.

**கண்டாகும் பாலுண்டாய் :—**

கண்டு—கற்கண்டு. கற்கண்டுபோல் இனிமையாகவுள்ள அம்மை திருமுலைப்பாலுண்டதைத் தெரிவிக்கின்றது.

" திருந்தப் புவனங்கள் ஈன்ற பொற்பாவை திருமுலைப்பால் அருந்தி "

என்பது அலங்காரம்.

**கந்தா மைந்தாரந்தோள் மைந்தா :—**

கந்து ஆம் மைந்து ஆர் அம் தோள் எனப் பதப்பிரிவு செய்க.

| | | | |
|---|---|---|---|
| கந்து | — | தூண். | தூண்போன்ற |
| மைந்து | — | வலிமை. | வலிமை நிறைந்த |
| ஆர் | — | அருமை. | அரிய |
| அம் | — | அழகு. | அழகிய |

தோள்மைந்தா — தோளையுடைய வீரரே!

**கந்தா சேந்திற் பெருமாளே :—**

கந்தன் என்பது முருகனுடைய நாமங்களில் உயர்வுடையது. இதன் பொருளை முன்னர் நமது அமிர்தத்தில் விரித்து எழுதியுள்ளேன்.

சேந்தில்—இரண்டாவது படை வீடு; சுவாதிட்டானத் தலம்.

**கருத்துரை**

**சூரசங்காரரே! வள்ளிமலை வேலவரே! செந்திலாண்டவரே! மாதராசையிற்பட்டு மாண்டு சுடலை ஏகாமுன் வந்தருளி பாதமலரைத் தந்து ஆட்கொள்ள வேண்டும்.**





# கற்பு

## *நீலி*

**' முற்பகல் செய்யில் பிற்பகல் விளையும் '**

முத்தித் தலம் ஏழு. காசி, காஞ்சி, அவந்தி, அயோத்தி, மதுரை, மாயை, துவாரகை. இவற்றுள் 6 தலங்கள் வடநாட்டில் உள்ளவை. காஞ்சி ஒன்று தென்னாட்டில் உள்ளது. "நகரேஷு காஞ்சி" என்பர். காஞ்சி மாநகருக்கு நிகரான நகர் இல்லை என்று முருகப் பெருமானே வள்ளியம்மையாரிடம் கூறியிருக்கின்றனர். அரிய பெரிய திருத்தலம். தொண்டை மண்டலத்தின் தலைநகருமாகும். அம்மை மணலால் மாவடியில் சிவலிங்கம் அமைத்து வழிபட்டது. சுந்தரர் கண் பெற்ற தலம்.

இத்தகைய கச்சியம்பதியில் **விதேகன்** என்ற வேதியன் ஒருவன் வாழ்ந்தனன். அவன் மனைவி **நவஞானி**. இருவரும் ஒற்றுமையுடன் வாழ்ந்தார்கள். நவஞானிக்கு ஒரு மகன் பிறந்தனன்.

விதேகன் மனம் ஆசைக்கு அடிமையாயிற்று. வேறு மனைவியை மணந்து கொள்ள விரும்பினான். உரிய நண்பர் பலர் தடுத்தனர். "தாரமிருக்க மற்றொரு தாரம், பாரம்; அதனால் வினையும் கோரம்" என்று அன்பர்கள் கூறிய அறவுரையை அவன் கேட்டானில்லை. இளையாள் ஒருத்தியை மணந்து கொண்டான். பின்னர் இளையாள் கரும்பாகவும், மூத்தாள் வேம்பாகவும் ஆனார்கள். மூத்தவளாகிய நவஞானியை அறவே வெறுத்தான். மூத்தவள் கணவன் கால்மீது வீழ்ந்து "பிராணபதி! நான் தங்கள் மனைவியல்லவா? என்னை வெறுக்க வேண்டாம். இளையாளிடம் பிரியமாக இரும். நான் தடுக்கவில்லை. என்னையும் என் குழந்தையையும் இடர்ப்படுத்த வேண்டாம். என்னை அல்லற்படுத்துவது அழகன்று, அருளன்று" என்று கூறி வேண்டினாள்.

மோகவெறி பிடித்த மூடனாகிய விதேகன் இளையாளுடைய மையல் கடலில் முழுகினான்; மதி மயங்கினான். மூத்தவளையும் அவள் மகனையும் வஞ்சனையாக ஊர்ப் புறத்தே அழைத்துச் சென்று கொன்றுவிட்டான்.

நவஞானி பேயாக ஆனாள். கோதிப்புற்றாள். பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்று பதறினாள். இங்கும் அங்குமாக அப் பேய்வடிவு அலைந்தது. திருவாலங்காட்டிலே ஒரு அந்தணன் இருந்தான். புரிசைக்கிழான் என்பதுஅவன்பேர். அவனுக்கு மகளாக வந்து பிறந்தது அப்பேய். அது பெண் வடிவாக இல்லாமல் பேய்த் தோற்றமாக இருப்பதைக் கண்டு அந்தணன் அஞ்சி விரட்டிவிட்டான். அப்பேய் திருவாலங்காட்டின் சுற்றுப் புறத்தே நிலையின்றி அலைந்துகொண்டிருந்தது.

மனைவியைக் கொன்ற விதேகன் சிறிது காலத்திற்குப் பின் மாண்டனன். ஒரு வைசியன் மகனாகப் பிறந்தான். சுதர்சனன் என்பது அவன் பேர். வியாபாரம் புரிந்து பொருளீட்டி மனைவியுடன் சீரும் சிறப்புமாக வாழ்ந்தான். ஒரு நாள் அவன் வீட்டிற்கு ஒரு மாந்திரீகன் வந்திருந்தான். அவன் அந்த வைசியனுக்கு நண்பனானான். "அப்பனே! உன்னை ஒரு பேய் தொடர்ந்து கொல்லுதற்கு முயலுகின்றது. அப்பேயால் உனக்கு மரணம் நேரும். இந்தக் கத்தியில் மந்திர உரு ஏற்றி வைத்துளேன். இதனை இடையில் சொருகி வைத்துக் கொள். இக்கத்தியுன்பால் இருக்குமாயின் அப்பேய் உன்னை அணுகாது" என்று கூறி ஒரு மந்திரவாளை நல்கிச் சென்றனன். வைசியன் அது முதல் அவ்வாளைத் தற்காப்புக்காக இடையில் வைத்திருப்பானாயினான்.

சுதர்சனன் வியாபார நிமித்தம் அடிக்கடி அயலூர் செல்லுவான்; சரக்குகளைக் கொள்முதல் புரிந்து காஞ்சிபுரத்தில் கொணர்ந்து விற்பான். ஒருநாள் திருவாலங்காடு சென்றான். அங்கே பண்டங்களை விற்றான். ஊருக்குத் திரும்பினான். மாலை நேரம்; எப்படியும் வேகமாகக் காஞ்சீபுரம் சேர்ந்துவிடலாம் என்று கருதி வேகமாகப் புறப்பட்டான்.

திருவாலங்காட்டிலேயுள்ளவர்கள், "தம்பீ! இவ்வூரின் அருகே பேய் ஒன்று உலாவுகின்றது. சூரியன் மேற்கடலையணுகிவிட்டான். இனி நீ காட்டு வழியில் காஞ்சிபுரம் போவது சரியன்று. நாங்கள் இரவில் பேய்க்கு அஞ்சி வெளியே செல்லுவதில்லை. நீ இன்றிரவு இங்கு தங்கிவிட்டு நாளைக் காலையில் புறப்பட்டுச் செல்லுதி" என்று கூறித் தடுத்தனர்.

**ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று**
**சூழினும் தான்முந் துறும்.**

என்றபடி விதி வழியே மதி செல்லும் அல்லவா? சுதர்சனன் ஊரவர் உரையைப் பொருட்படுத்தினானில்லை. "பேயாவது? பிசாசாவது? சுத்தப் பயித்தியங்கள்; பேய்க்கு அஞ்சுகின்றவன் நானன்று. என்னை அது என் செய்யும்? சும்மா இந்த வீண் பயத்தை விடுங்கள்" என்று கூறிவிட்டுப் புறப்பட்டான்.

திருவாலங்காட்டை விடுத்து அருகே உள்ள காட்டு வழியே சென்றுகொண்டிருந்தான். பொழுது மறைந்தது. இருள் நிறைந்தது. அப்பேய் பெண் வடிவங்கொண்டு அவன் முன் நின்றது. கண்வலை வீசி அவனை மயக்க முயன்றது. அவன் ஐயுற்றான். "இது பெண்ணா? அல்லது பேயா? இந்த இரவில் இருள் சேர்ந்த காட்டில் ஒரு பெண் தனியே இருக்க நியாயமில்லையே?" என்று எண்ணினான். உடம்பு நடுங்கியது, நடை ஒடுங்கியது. என் செய்வான்; திகைத்து நின்றான்.



பெண் பேய் அவன் அருகில் நெருங்கியது. சுதர்சனன் ஓடலானான். பேயும் அவனை ஓடித் தொடர்ந்து அவன் முன் நின்றது. இப்போது அவன் மனைவியின் வடிவத்தைக் கொண்டு நின்றது. இந்த மாயவடிவைக் கண்ட அவன் மேலும் கலக்கமுற்றான். அந்தோ என்று அலறினான்; மீண்டும் ஓடித் திருவாலங்காட்டிற்கு அருகில் உள்ள பழையனூர் சென்றான். பேய் வழியில் இருந்த கள்ளிக் கட்டையை எடுத்து குழந்தை வடிவாகச் செய்துமடியில்வைத்துக்கொண்டு அவனைத்தொடர்ந்துசென்றது.

பழையனூரில் வேளாள குலத்தினர் மிகுதியாக வாழ்ந்தனர். அவர்கட்குத் தலைவர்கள் எழுபதின்மர். அவர்கள் அம்பலம் என்னும் பொது இடத்தில் வாரந்தோறும் கூடி நியாயம் வழங்குவார்கள். எல்லோரும் அவர்களிடத்தில், தங்கள் குறைகளைக் கூறி நியாயம் பெறுவார்கள். அன்று அந்தப் பொது இடத்தில் எழுபதுபேரும் கூடியிருந்தார்கள்.

அங்கே சென்று சுதர்சனன் "பெரியோர்களே! இதோ இந்தப் பேய் என்னைத் தொடர்ந்து இடர்ப்படுத்துகின்றது; என்னைக் காப்பாற்றுங்கள்" என்றான்.

நீலிப்பேய், "அன்பும் ஆதரவும் படைத்த ஆன்றோர்களே! இவர் என் கணவர். நான் இவர் மனைவி; இவர் ஒரு விலை மகளின் வலைப்பட்டு என்னைப் புறக்கணிக்கின்றார். 'தையலார் மயலிற்பட்டோர் தமக்கொரு மதியு முண்டோ?' என்றபடி இவர் அறிவு இழந்து, தாலி கட்டிய மனைவியாகிய என்னை வெறுத்துத் தள்ளுகின்றார். அந்தோ! நான் என்செய்வேன்? பெண்களுக்குக் கணவன் தானே கதி. அடித்தாலும் உதைத்தாலும் இவர் பாதமே தஞ்சம். நான் எத்தனை விதமாக இவரிடம் அன்பாக நடந்தாலும் இவர் என்னை வேம்பாக நினைத்து வெறுக்கின்றார். கருணை நிறைந்த பெரியோர்களே! இவர் என்னை விரும்பாவிடினும் வெறுக்காமலிருந்தால் போதும்; வெறுத்தால் குழந்தையும் நானும் எங்கு சென்று வாழ்வோம்? எப்படி உய்வோம்? எனக்காக இரங்கவில்லையாயினும் இந்தக் குழந்தைக்காகவாவது இரங்க வேண்டாமோ? உங்களுக்குப் பல கோடி வணக்கம். இவருக்கு அறவுரை கூறி இவருடன் என்னைச் சேர்த்து ஆதரியுங்கள். இந்தக் குழந்தை அப்பா அப்பா என்று அலறுகின்றது. நான் அபலை; திக்கற்றவள். எனக்கு அன்னையுமில்லை; அப்பனுமில்லை. வேறு உறவு ஒருவருமில்லை. தாவிப்படரக் கொழு கொம்பிலாத தனிக்கொடி போல் தவிக்கின்றேன். காத்தருள்வது உங்கள் கடன்" என்றுகூறி முறையிட்டது. அவள் கண்களிலிருந்து முத்து முத்தாக நீர்த் துளிகள் சிந்தின. சோகமே உருவாக நின்றாள். அப்பேய் இத்தனை சாகசம் செய்தது.

அம்பலத்தார்கள், "அம்மா! அழாதே. மனதைத் திடப்படுத்திக்கோள். உன் துயரத்தை நடராஜப்பெருமான் கருணை

யால் மாற்றுகின்றோம்'' என்று ஆறுதல் கூறினார்கள். வணிகனைப் பார்த்து, ''ஐயா! உம்முடைய வாக்குமூலம் யாது?'' என்று கேட்டார்கள்.

''பெரியோர்களே! இது பேய்; பெண்வடிவில் வந்து என்னைத் துன்புறுத்துகின்றது. இது கூறும் சொற்கள் அத்தனையும் பொய். என் உண்மையான மனைவி காஞ்சியில் இருக்கின்றாள். ஆகா! உலகில் என்ன என்ன இந்திரஜாலம் நடக்கின்றது. இதன் பொய் நடிப்பைக் கண்டு நீங்கள் ஏமாற வேண்டாம். இதனை அடித்து விரட்டுங்கள்'' என்றான் வணிகன்.

அம்பலத்தில் உள்ள வேளாளர்களுக்குத் தலை சுழன்றது. உண்மை புலப்பட வில்லை. இருவர் கூறுவதில் எது சரி, எது பிழை என்று அறியாமல் திகைத்தார்கள்.

அம்மா! நீ இவரைக் கணவன் என்று கூறுகின்றாய்; இவர் இல்லை என்கின்றார். நாங்கள் யாருடைய சொல்லை நம்புவது? நீ இவர் மனைவி என்பதற்கு ஏதாவது சான்று உளதா? என்றார்கள்.

பெரியோர்களே! நன்றாகவுளது. உண்மையில்லாமலா பெண்மையுடன் கூடிய நான் மன்றாடுவேன். என்ன இருந்தாலும் நான் பெண்ணல்லவா! இவர் பொதுமகள் மோகத்தில் மதிமயங்கி என்னைக் கைவிட்டதுமன்றி பேயென்று நிந்திக்கின்றார். இது முறையா? இது தகுமா? இது தருமமா? ஐயோ என்மனம் பதறுகின்றது. உள்ளம் உருகுகின்றது. குதிரை தன் மீதிருந்த ஒருவனைக் கீழே தள்ளியது மன்றி குழியும் பறித்ததாம். அதுபோல் இவர் என்னைத் தள்ளியதுமன்றி பேய் என்று கூறி நிந்திக்கின்றார். தெய்வந்தான் இவருக்கு நற் சிந்தனையைத் தரவேணும். நான் முற்பிறப்பில் என்ன தீவினை செய்தேனோ? இவர் மனம் என் விஷயத்தில் கல்லாக மாறி விட்டது. தாலிகட்டிய மனைவியைத் தவிக்க விடலாமா? என்னை இவர் கொல்லவும் நினைக்கின்றார். நான் என் செய்வேன்? பெண்ணாகிய நான் எங்கு போவேன்? உங்களுக்கு ஒரு கோடி புண்ணியம் வரும். இவரையும் என்னையும் ஒன்று படுத்தி வையுங்கள். இவர் கணவன் என்பதற்கு என்ன சான்று என்று கேட்கின்றீர்கள். நான் எந்த வகையில் சான்று கூறுவேன்? இதோ என்மடியில் உள்ள பச்சிளங் குழவியே சான்று சொல்லும்'' என்று அழுது கொண்டே மடியில் இருந்த குழந்தையைக் கீழே இறக்கி விட்டாள்.

அப் பேயின் மாயத்தால் கள்ளிக் கட்டையாகிய அக் குழந்தை ''அப்பா! அப்பா!'' என்று கூவியழுது கொண்டே தவழ்ந்து சென்று வணிகனுடைய காலைக் கட்டிக் கொண்டு அழுதது.



இந்த அதிசயத்தைக் கண்ட சுதர்சனன் திடுக்கிட்டான். அம்பலத்தாரை நோக்கி, ''ஆன்றோர்களே! இப் பேயின் வஞ்சனைச் செயலை வகுத்துரைக்க வொண்ணுமோ? வரும் வழியில் கள்ளிக்கட்டையை எடுத்து இக்குழந்தை வடிவாகச் செய்து இம்மாயத்தைச் செய்கின்றது. இதுபேய்; சத்தியமாகச் சொல்லுகின்றேன். என் மனைவியன்று. என்னை இப்பேய் கொல்ல நினைத்து வந்துளது'' என்றான்.

எக்காலத்திலும் குழந்தை சாட்சி யாவரும் ஒப்புக் கொள்ளக் கூடியதாகும். ஆதலால் குழந்தையின் சாட்சியை சபையோர்கள் நம்பினார்கள். ''ஐயா! எங்கள் பேச்சைச் சற்று கேளும். ஏதோ உங்களுக்குள் மனத்தாங்கல் ஏற்பட்டுளது. இன்று இரவு இருவரும் இந்த வீட்டில் ஒற்றுமையாக இருங்கள்; உங்களுக்குள் ஏற்பட்டுள்ள மனமாறுதல் அகலும்; இப்போது அகாலமாகிவிட்டது; விடிந்து நாளைக்கு உங்கள் குறைகளைக் கேட்டு ஒருமுடிவுக்கு வருவோம். ஆகவே இந்த இரவை இந்த அறையில் கழியுங்கள்'' என்றார்கள்.

சுதர்சனன், ''அந்தோ! பெரியோர்களே! இதுபேய்; பேயுடன் நான் எப்படி தங்குவேன்! என் உயிரைப் போக்கி விடும் இப்பேய். வேண்டாம் என்னைக் காப்பாற்றுங்கள்'' என்றான்.

அம்பலத்தில் உள்ள வேளாளப் பெரியோர்கள், ''செட்டியாரே! நீர் சிறிதும் அஞ்ச வேண்டாம்; உன் உயிருக்கு ஆபத்து வர நாங்கள் சம்மதிக்க மாட்டோம். இன்றிரவு இந்த வீட்டில் தங்கியிரும். அப்படி உன் உயிர்போகுமேல் அவ்வுயிருக்குப் பிணையாக நாங்கள் எழுபதுபேரும் எங்கள் உயிரைத் தருவோம்'' என்று கூறித் தேற்றினார்கள்.

இருவருக்கும் உணவு படைத்தார்கள். தனி வீட்டில் அவர்களை இருக்குமாறு செய்தார்கள். நீலிப் பேய் ''பெரியோர்களே! இதோ இவர் இடுப்பில் கத்தி வைத்திருக்கின்றார். அதனால் ஒருவேளை என்னைக் கொன்றாலும் கொல்லுவார். எனக்கு அச்சமாக இருகின்றது. ஆதலால் கருணை நிறைந்த நீங்கள் இந்தக் கத்தியை வாங்கிக் கொள்ளுங்கள்'' என்றது.

''ஐயா! வணிகரே! உமது இடையில் வாள் இருப்பதாக இந்த அம்மை கூறுகின்றாள். ஆகவே கணவனும் மனைவியும் களித்திருக்கின்ற வேளையில் கத்திக்கு வேலையில்லை. அந்தவாளை எம்மிடம் தாரும்; விடிந்தபின் பெற்றுக் கொள்ளும்'' என்றார்கள் சபையோர்கள்.

வணிகன், ''உத்தமப் பெரியோர்களே! இது எனக்கு ஒரு பெரியவர் தந்தது; இப்படி ஒரு பேய் தொடரும்; இந்தக்

கத்தி உன்பால் இருந்தால் பேயினுல் இடர் வராது. என்று கூறித்
தந்த மந்திரவாள் இது. இந்தக் கத்தி என்பால் இருப்பதனுல்
தான் இப்பேய் என்னை அணுகிக் கோல்லாமல் இருக்கின்றது.
ஆகவே இக் கத்தியை நான் தரமாட்டேன்'' என்ருன்.

பேரியோர்கள், ''அப்பனே; அஞ்சாதே! உனக்கு ஒரு
ஆபத்தும் வராது. வாள் இருப்பதை நோக்கி இப் பேண். அஞ்சு
கின்ருள். சதிபதிகள் ஒற்றுமையாக இருப்பதுவே அழகு. எங்கள்
சோல்லைத் தள்ளாதே; உனக்குத் தீங்குவர நாங்கள் ஒருப்படு
வோமா? கத்தியைத் தந்துவிட்டு இங்கு இன்றிரவு மகிழ்ச்சி
யாகத் தங்குங்கள்'' என்று கூறி கத்தியை வாங்கிக்கோண்டு
இருவரையும் அந்த தனிவீட்டில் இருத்திவிட்டு அவர்கள் ஆறு
தலுடன் தத்தம் இல்லங்கட்குச் சென்ருர்கள். பேயின் மாயமறி
யாத அவர்களால் மேல் நிகழ இருப்பதை யறியமுடிய வில்லை.
கள்ளமறியாத உள்ளமுடைய அவர்கள் சென்றபின் என்ன
நிகழ்ந்தது ?.

நீலி வணிகனுடன் உள் சென்று தாளிட்டாள். பழிவாங்கச்
சமயம் வாய்ந்தது என்று மகிழ்ந்தாள். ''என் பிராணபதியே!
என் அன்புநிறைந்த ஆருயிர்க் காதலரே! உள்ளத்தைக்
கோள்ளை கோண்ட உத்தம ரத்தினமே! என்று கூறி அருகிலே
வந்தாள். கோர வடிவத்தைக் கோண்டது அப்பேய். அவனேப்
பிடித்துக் கிழித்துக் குடலை எடுத்து மாலையாகப் போட்டுக்
கோண்டது. வஞ்சினம் முடிந்தது என்று மகிழ்ந்து மறைந்து
சென்றது.

போழுது புலர்ந்தது. எழுபது வேளாளப் பெருமக்களும்
அங்கே குழுமினுர்கள். கதவு மூடிய வண்ணமே இருந்தது.
தட்டினுர்கள். திறக்கப்படவில்லை. நேடுநேரம் காத்திருந்தார்கள்.
கதவை உடைத்து உள்ளே சென்று பார்த்தார்கள்.
மாண்டு கிடப்பதைக் கண்டார்கள். வணிகன்
தையையுங் கண்டார்களில்லை. ''அந்தோ என்று அலறினுர்கள்.
பேயின் மாயத்தையறியாமல் பேதைகளானேமே! இப் பழி
பாவத்திற்கு ஆளானேமே! ஆலங்காட்டில் வாழும் அண்ணலே!
இவனுடைய மரணத்திற்கு நாங்கள் காரணமாக நின்ருேமே!
இப்பாவத்தை எங்ஙனம் தீர்ப்போம்? எங்கள் மனம் வேகின்றதே
இவன் கூறியது உண்மை. இவன் உயிர் போனுல் நாங்கள்
எழுபதுபேரும் உயிர் தருவதாக உரைத்தோமே?

**யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்**
**வாய்மையின் நல்ல பிற.**

என்று நாங்கள் படித்தோமே! அதன்படி நடக்க வேண்டாமா?
சத்தியம் பிறழ்ந்து உயிர் வாழலாமா! ஈசனே! மலைமகள்
நேசனே! சோற்சோர்வுபட மாட்டோம் எங்கள் குலத்திலே



சொன்ன சோல்லை மாற்றுவது இல்லை. பரம்பரையாகச் சத்திய
நேறியில் நிற்கின்ற நாங்கள் உயிர் வாழ்க்கையை விரும்பி,
வாய்மை தவற மாட்டோம்'' என்று உயிர் விடத் துணிவு
சேய்தார்கள்.

அம்பலத்திற்கு எதிரே ஒரு பேரிய தீக்குண்டம் அமைத்
தார்கள். ஊரவர்கள் கூடி அவர்களைத் தோழுதார்கள். அழு
தார்கள். 'வேண்டாம். தீயில் விழவேண்டாம்; ஒருவனுக்காக
எழுபது பேர் மாள்வதா? எழுபது குடும்பங்கள் தவிக்குமே!
மாண்டவன் ஆன்மா சாந்தியடையுமாறு ஏதாவது சாந்தி
சேய்யுங்கள். வணிகனை நீங்களா கோன்றீர்கள்? பேயின்
சேயலுக்கு நீங்கள் என்ன சேய்ய முடியும்? ஆதலினுல் நீங்கள்
நேருப்பில் வீழ்ந்து வீணே உயிர் விட வேண்டாம்' என்று கூறித்
தடுத்தார்கள்.

'ஊரவர்களே! நீங்கள் கூறுவது முறையன்று. 'உன்
உயிர் போனுல் நாங்கள் எழுபது பேரும் உயிர் தருவோம்' என்று
வணிகனுக்கு நாங்கள் உறுதிமோழி கூறினேம். அச்சோல்லுக்
காக நாங்கள் உயிரை விடுவது நியாயம். ஒரு சோல்லுக்காகத்
தானே அரிச்சந்திரன் மகனையும், மனைவியையும் விற்ருன்.
தானும் பறையனுக்கு அடிமையானுன். மயானங் காத்தான்.
ஆகவே அரிச்சந்திரன் வாழ்ந்த இப் பாரத நாட்டில் நாங்கள்
சத்தியந் தவறக்கூடாது. நீங்கள் வருந்த வேண்டாம்; என்றும்
மரணம் உள்ளதுதானே. பூத உடம்பு போனுலும் புகழுடம்பு
நிற்கும்.

**''எல்லா விளக்கும் விளக்கல்ல சான்ருேர்க்குப்**
**பொய்யா விளக்கே விளக்கு''**

என்கின்ருர் போய்யில்புலவர். ஆனபடியால் நாங்கள் உயிரை
யீந்து நற்கதி புகுவோம்'' என்று கூறினுர்கள். விண்ணளவும்
வேந்தீ கோழுந்து விட்டேரிந்து கோண்டிருந்தது.

எழுபதுபேரில் ஒருவர் வேறு கருமமாக வயற்புறம்
போயிருந்தார். மற்றை அறுபத்தோன்பது பேரும் நீராடினுர்கள்;
நீறு பூசிக் கோண்டார்கள். ஆலங்காட்டு அண்ணலை வணங்கி
னுர்கள். தீக்குழியை வலம் வந்தார்கள். திரு ஐந்து எழுத்தை
ஓதினுர்கள். அகமும் முகமும் மலர்ந்த வண்ணமாக அத்தனை
பேரும் தாமரையில் இறங்கும் அன்னங்களைப் போல் கோழுந்து
விட்டேரியும் அக்கினிக் குண்டத்தில் குதித்து விட்டார்கள்.
என்னே அவர்களின் மனவுறுதி? வாய்மையின் தூய்மைதான்
என்னே ?

எழுபதின்மரில் ஒருவர் தனது கழனிகளை உழுது கோண்
டிருந்தார். இந்நிகழ்ச்சியை அவர் அறியார். நீலி பேண்ணுருவுடன்
சென்று அவர்பால் இச்சேயலையுரைத்து நீர்மட்டும் வாழலாமோ!

உம்மைச் சேர்ந்தவர்கள் மாண்டார்கள். வேளாளருக்குக் கோழுவே ஆயுதமாகுமே? என்று கூறி மறைந்தது. இதனைக் கேட்ட அவர் உழுகலப்பையின் கோழுவைக் கொண்டு தனது உயிரைப் போக்கிக் கொண்டார்.

விழுவேன் எனச் சென்று வீழ்ந்தாரில்
ஓர் மைந்தன் வேறுபட
உழுவேரில் சென்று ஒருநீலி முன்கை
உடைய வற்குக்
கொழுவே படைக்கலம் என்று சொலாமுனம்
கூறிய சொல்
வழுவேன் எனப் பொன்று வல்லாளனும் தொண்டை
மண்டலமே.

—படிக்காசுப்புலவர்.

தீக்குழியில் நெருப்பு சில நாட்கள்வரை அவியாமல் எரிந்த வண்ணமாகவே இருந்தது. பலவூர்மக்கள் வந்து வந்து வலம் வந்து வணங்கினார்கள். கண்ணீர் சிந்தினார்கள். உண்மைக்காக உயிர் கொடுத்த உத்தமர்களைப் புகழ்ந்தார்கள். அவர்கள் புகழ் என்றும் நிலைபெறும் என்று மகிழ்ந்தார்கள்.

இச்செயலை தமிழ் வேந்தர்கள் மூவரும் ஒற்றர்கள் மூலம் அறிந்தார்கள். அதிசயம் உற்றார்கள். ஆருத்துயரங் கொண்டார்கள். நேரில் வந்து கண்டார்கள். கண்ணீர் பெய்தார்கள்; பேயை வைதார்கள். வியந்து கவிபாடினார்கள்.

யாவரே காராளர் யாவர் இணை ஆவார்
நாவலோ நாவலோ நாவலோ—கோவைப்
பொருப்பால் அளந்தார்க்குப் போதுமே உண்மை
நெருப்பால் அமைத்தார்க்கு நேர்.

—சேரன்.

எல்லை பலகடந்திட் டெங்கும் புகழ்பூத்துத்
தொல்லை மனுக்காக்கத் தோன்றிற்றே—கொல்லை
வழியிலொரு பேய் நின்று வஞ்சனையால் செய்த
குழியிலெழு செந்தீக் கொழுந்து.

—சோழன்.

பிழைத்தாரோ காராளர் பேய்மகள் சொற்கேட்டுப்
பிழைத்தார்கள் அல்லர் பிழைதீர்த்தார்—பிழைத்தார்கள்
எல்லாருங் காண எரியகத்தே மூழ்கினார்
எல்லாரும் இன்றும் உளர்.

—பாண்டியன்.

இந்த நிகழ்ச்சி நிகழ்ந்து ஆயிரம் ஆண்டுகள் ஆயின. இன்றும் இந்நிகழ்ச்சி நம் உள்ளத்தை உருக்குகின்றது. சத்தியத்திற்கு எடுத்துக் காட்டாக விளங்குகின்றது. எண்ணுந்தோறும் மனம்



கரைகின்றது. நமது முன்னோரின் வாய்மை நெறி நம்மை உயர்த்துகின்றது. ஆ! ஆ! என்னே அவர்களது உறுதி? வாய்மையில் இருந்த திட்பந்தான் என்னே?

இந்த வரலாற்றிலிருந்து நாம் விளங்கிக்கொள்ளவேண்டிய சில நெறிகள்:

(1) விதேகன் மறுதாரம் புரிந்துகொள்ளாதிருப்பின் இந்த வேதனை அவனுக்கு வந்திராது. மறு தாரம் புரிந்து இளையாள் மோகத்தினால் மூத்தாளைக் கொன்றான். அவ்வினை மறுபிறப்பில் மூண்டுவந்து மாண்டுபோகுமாறு செய்தது. ஆகவே தாரமிருக்கத் தாரம் மணப்பது என்றும் பிழை.

(2) திருவாலங்காட்டில் உள்ளவர்கள் சுதர்சனனை நோக்கி, "மாலை நேரம். பேயால் இடர் வரும். போகாதே" என்றார்கள். ஆன்றோர் சொற்களைத் தட்டியதனால் துன்புற்றான். ஆதலின் நாலுபேர் நவின்றதைத் தட்டக்கூடாது.

(3) ஊழ் வந்து பைய உருத்து வருத்தும். ஊழை வெல்ல ஒருவராலும் ஆகாது. முன் செய்த தீவினையால் சுதர்சனன் மாண்டான். ஆகவே "நோயெல்லாம் நோய் செய்தார் மேலவாம்" என்ற வள்ளுவர் வாக்கின்படி நாம் யாருக்கும் தீங்கு செய்யக்கூடாது. செய்யின் அது பின்னர் நம்பால் வந்து சேரும்.

(4) வேளாண் மரபில் வந்த எழுபதின்மரும் தாங்கள் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்றும் பொருட்டு தீக்குழியில் வீழ்ந்து நற்கதி புகுந்தார்கள். அவர்களுடைய மனத்தின் உறுதியை அளக்கவல்லார் யார்? வாயிடை கூறியதற்காகத் தீயிடை வீழ்வது என்றால் அது எளிதான கருமமா? அதனால் சந்தான குரவர்களில் ஒருவராகிய உமாபதி சிவம் புகழ்ந்து பாடுகின்ற அளவில் அவர்கள் புகழ் ஓங்கியது.

மாறுகொடு பழையனூர் நீலிசெய்த
வஞ்சனையால் வணிகன்உயிர் இழப்பத் தாங்கள்
கூறியசொல் பிழையாது துணிந்து செந்தீக்
குழியில் எழுபதுபேரும் முழுகிக் கங்கை
ஆறணி செஞ்சடைத் திருவாலங்காட்டு அப்பன்
அண்டமுள நிமிர்ந்து ஆடும் அடியின்கீழ் மெய்ப்
பேறுபெறும் வேளாளர் பெருமை எம்மால்
பிரித்து அளவிட்டு இவளவு எனப் பேசலாமோ?

அன்றியும் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் தாம் பாடியருளிய தேவாரத்திலும் கூறுகின்றனர்.

"வஞ்சம் படுத்து ஒருத்தி வாழ்நாள் கொள்ளும் வகைகேட்டு
அஞ்சும் பழையனூர் ஆலங்காட்(டு) எம்அடிகளே"

பல ஆண்டுகளுக்கு முன்னே சுப்பிரதீபக் கவிராயர் என்பார் ஒருவர் இருந்தார். விறலிவிடு தூது என அவர் ஒரு நூல் பாடி

இயைந்து தமிழ் என வந்தது. த-வல்லோசை; மி-மேல்லோசை; ழ்-இடையோசை. என்ன அழகு! பேரே இப்படி அமைந்திருந்தால் தமிழ் இலக்கண அமைப்பு, இலக்கியச் சுவை முதலியவைகள் எப்படியிருக்கும் என்பதைச் சிந்தித்து உணர்க.

தமிழின் பெருமையைச் சிந்திப்பாரின் எண்ணிக்கை குறைந்துவருகின்றது. கோஞ்சம் படித்தவுடன் முற்றுங் கற்றுவிட்டதாகத் தருக்குஞ் சேருக்கும் உற்று இடர்ப்படுவார் பலரைக் கண்டு வருந்துகின்றேன். பத்துக் கம்பன் என்று புகழ்பேற்ற திரிசிரபுரம் மஹாவித்வான் மீனுக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள் இறுதிவரைத் தன்னைத் தமிழ் மாணவனுகக் கருதிவந்தனராம். அவர் தந்த பிச்சையல்லவா இன்று சிறிதாவது தமிழ் நலம் உலவிவருகின்றது.

அகர வுயிர் பதியையும், உயிர் மேய் பசுக்களையும், மேய் பாசத்தையும் ஆக பதி பசு பாசத்தை யறிவிக்கின்றது தமிழ்.

"அகரவுயிர் போல் அறிவாகி எங்கும்
நிகரில்இறை நிற்கும் நிறைந்து"

என்பது திருவருட்பயன்.

தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்ற எழுவகைப் பிறப்புக்களையும் தமிழில் உள்ள ஏழு வேற்றுமைகள் குறிக்கின்றன.

முற்காலத்திலே தமிழிலே வேட்கைகோண்டு தமிழாகிய தண்ணீரை அள்ளி அள்ளிப் பருகி, அமிழ்தினும் இனிய தமிழ்க் கடலிலே நீந்தி விளையாடிய பல புலவர்கள் வாழ்ந்தார்கள். அப்புலவர் வரிசையில் முன்னணியில் நின்றவர் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள். அவருடைய பாடல்கள் ஒவ்வோன்றும் அருமை நிறைந்தது. வேலமரத்தில் இளங் கோழுந்தில் கரிய வயிர ரேகை ஓடுவதுபோல் சிவப்ரகாசருக்கு மாணவராக நின்றபோதே கவிதாசக்தியும் அதிசய புத்தியும் அமைந்திருந்தன.

பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்ப்பது என்பது பழமோழி. ஸ்தாலிபுலாக நியாயம் என்று வடமோழியில்கூறுவர். ஆகவே அவர் வாக்கில் வந்த ஒரு பாடலை எடுத்துக் காட்டி ஒருவாறு தமிழின் பெருமையை நினைவு கூர்வாம்.

சிவப்பிரகாசர் இளமையில் தமிழ் கற்பதில் அளவற்ற வேட்கையுடையவராக இருந்தார். அவருடைய அறிவாற்றலுக்கு ஏற்ற ஆசான் அமையவில்லை. திருநேல்வேலியில் வேள்ளியம்பலவாணர் என்பவர் ஒப்பற்ற தமிழ் ஞாயிருக அந்நாள் விளங்கினுர், அவர் குமரகுருபருடைய சீடர்; திருச்சேந்தூர்க் கலம்பகம் முதலிய நூல்களைப் பாடியவர். அவருடைய புகழ்க் கதிர் எங்கும் பரவியது. சூரியனுடைய ஒளியை விரும்பு சக்கிரவாகப் பறவைபோல் சிவப்பிரகாசர் அவரை நாடி ஓடினு

அவரைப் பணிந்து நின்றார். தமிழ்மொழியைப் பயிற்றி வைக்க வேண்டும் என்று இரந்தார்.

வெள்ளியம்பலவாண முனிவர் தன்னை யடுத்த தமிழ் மாணவனுடைய அறிவை அளந்து சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று எண்ணினார்.

'தம்பி! இதுவரை ஏதாவது தமிழ் பயின்றிருக்கின்றனையா?''

“ஆம். சிறிது பயின்றுளேன்; தங்கள்பால் நிரம்பவும் பயில விரும்பி வந்துளேன்”

“நல்லது; ஏதாவது கவிபாடக் கற்றிருக்கின்றனையா?”

“குழறிக் குழறிக் கொஞ்சம் பாடுவேன்”

“கு” என்று தொடங்கி, ‘கு’ என்று முடிக்கவேண்டும். சிவ சம்பந்தமாக இருக்கவேண்டும். நேரிசை வெண்பாவாகவும் அமையவேண்டும். ஊருடையான் என்று இடையில் வரவேண்டும். பாடு”

“புலவர்க்கு வெண்பாப்புலி”. எடுத்த எடுப்பிலே இந்தக் கடுமையான கட்டளை பிறந்தது. மாணவராகிய சிவப்பிரகாசர் உடனே அடியில் வரும் நேரிசைவெண்பாவைப் பாடினார். ஆ.ஆ. என்ன பாடல்? அழகிய அரிய தமிழ்ப்பாடல்.

**குடக்கோடு வானெயிறு கொண்டாற்குக் கேழல்**
**முடக்கோடு முன்னமணி வாற்கு—வடக்கோடு**
**தேருடையான் தெவ்வுக்குத் தில்லையதள் மேற்கொள்ளல்**
**ஊருடையான் என்னும் உலகு.**

இந்தப் பாடலைக் குறைந்தபட்சம் பத்து முறையாவது படியுங்கள். சொல்லழகு, நடையழகு, தொடையழகு, பொருளாழம் முதலிய எத்தனை அழகுகள். அத்தகைய பாடல்களைப் படித்தல்லவா ஒரு புலவர் பாடுகின்றார்.

**“இருந்தமிழே உன்னால் இருந்தேனே வானோர்**
**விருந்தமிழ்தம் என்னினும் வேண்டேன்”**

அவருக்கு தமிழில் இருந்த ஆர்வந்தான் என்னே. தேவர்களுடைய புதிய அமிர்தங்கூடக் கசக்கின்றதாம்.

இனி அந்தப் பாடலைப் பாருங்கள்.

**“குடக்கோடு வான்எயிறு கொண்டாற்கு”**

குடக்கு ஓடுவான் எயிறு கொண்டாற்கு. குண (கீழ்)திசையிலிருந்து குட (மேல்) திசை நோக்கிச் சென்று பொழுதை யளக்கின்றவன் சூரியன்.

சிவநிந்தை புரிந்த தட்சனுடைய யாகத்தில் அவிசை விரும்பிக் கலந்துகொண்ட அமரர்களுள் சூரியனும் ஒருவன். அமரர் அறியாமையை யகற்றும்பொருட்டு சிவபெருமான் வீரபத்திரரை தக்கனுடைய மகத்தையும் அகத்தையும் அழிக்கும் பொருட்டு



ஏவினார். வீரபத்திரர் யாகசாலை வந்தார். எதிர்த்து நின்ற சூரியனுடைய பற்றுண்டாக்கினார். (பல் துண்டாக்கினார்). பற்றற்றான்மீது பற்றுண்டாக்கினார். பற்றுண்டாக்கிப் பரமன்மீது பற்றுண்டாக்கி யருள் புரிந்தார்.

இதனை இந்த முதல் வரி தெரிவிக்கின்றது. குடக்கோடு வானாகிய சூரியனுடைய, எயிறு - பல்லை, கொண்டவன் - சிவபெருமான்.

**“குடக்கோடு வான்எயிறு கொண்டாற்கு”**

**“கேழல் முடக்கோடு முன்னமணி வாற்கு”**

கேழல்—பன்றி; முடக்கு—வளைவு. ஓடு—அதன் கொம்பு. இரண்யாட்சன் பூமியை யகழ்ந்து கடலில் கரைக்க முயன்றான். அப்போது திருமால் பன்றி யுருவமெடுத்து இரண்யாட்சனைக் கொன்று பூமியை நிலை நிறுத்தினார். திருவருளிலே தோய்வு இல்லாதவர் யாவர்க்கும் ஒரு பெரிய கருமஞ் செய்தவுடனே தான் என்ற அகந்தை வந்து முளைக்கும். திருமாலுக்கும் தான் என்ற தருக்கு வந்தது. நாம் இல்லையேல் உலகம் அழிந்திருக்குமே. ஆகவே நாமே உலகங்கட்கு முதல்வன் என்ற அகந்தை கொண்டு நிமிர்ந்து நின்றார். தனது அடிமைகள்பால் அகந்தை வந்தால் அதனை அகற்றி யாட்கொள்வது ஆண்டவனது கடமை. “தேவரையும் மாலயன் முதற் றிருவினார்கள் யாவரையும் வேறடிமையாவுடைய எம்மான்” என்கின்றார் சேக்கிழார் பெருமான்.

உடனே சிவமூர்த்தி குமார மூர்த்தியை யனுப்பினார். குமாரக் கடவுள் விரைந்து வந்து தருக்கி நின்ற வராகத்தின் கொம்பைப் பிடித்துப்பம்பரம்போல் சுழற்றினார். அப்போது திருமகள் வந்து வணங்கி மங்கலநாண் பிச்சை கேட்டனள். முருகவேள் திருவுளம் இரங்கி, வராக மூர்த்தியின் அகந்தையை மாற்றி, சிவனருளை ஏற்றி அதன் வளைந்த வெண்மையான கொம்பைக் கொணர்ந்து காணிக்கையாகப் பிதாவுடைய திருவடி மீது வைத்து வணங்கினார். மற்றுமுள்ளவர் அதனை அறிந்து உய்யும் பொருட்டு சிவபெருமான் திருமாலின் அக் கொம்பை மார்பில் அணிந்து கொண்டனர். தலையில் உள்ள பிறைமதியைப் போல் அதுவும் அழகாக விளங்கியது.

**“பன்றியங் கொம்பு கமடம்புயங் கஞ்சுரார்கள்**
**பண்டை என்பங்க மணி பவர் சேயே”**

என்று அருணகிரிநாதரும் திருப்புகழில் பாடுகின்றார்.

கேழல்—பன்றியினுடைய, ஓடு—வளைந்த தந்தத்தை, முன்னம் அணிவாற்கு—முன்னாள் அணிந்த சிவமூர்த்திக்கு என்பது இரண்டாவது வரியின் பொருள்.

இனி மூன்றாவது வரியைச் சிந்திப்போம்.

ஏவினர். வீரபத்திரர் யாகசாலை வந்தார். எதிர்த்து நின்ற சூரியனுடைய பற்றுண்டாக்கினர். (பல் துண்டாக்கினர்). பற்றற்றான்மீது பற்றுண்டாக்கினர். பற்றுண்டாக்கிப் பரமன்மீது பற்றுண்டாக்கியருள் புரிந்தார்.

இதனை இந்த முதல் வரி தெரிவிக்கின்றது. குடக்கோடு வானுகிய சூரியனுடைய, எயிறு - பல்லை, கொண்டவன் - சிவபெருமான்.

"குடக்கோடு வான்எயிறு கொண்டாற்கு"

"கேழல்

முடக்கோடு முன்னமணி வாற்கு"

கேழல்—பன்றி; முடக்கு—வளைவு. ஓடு—அதன் கொம்பு. இரண்யாட்சன் பூமியை யகழ்ந்து கடலில் கரைக்க முயன்றன். அப்போது திருமால் பன்றி யுருவமெடுத்து இரண்யாட்சனைக் கொன்று பூமியை நிலை நிறுத்தினர். திருவருளிலே தோய்வு இல்லாதவர் யாவர்க்கும் ஒரு பெரிய கருமஞ் செய்தவுடனே தான் என்ற அகந்தை வந்து முளைக்கும். திருமாலுக்கும் தான் என்ற தருக்கு வந்தது. நாம் இல்லையேல் உலகம் அழிந்திருக்குமே. ஆகவே நாமே உலகங்கட்கு முதல்வன் என்ற அகந்தை கொண்டு நிமிர்ந்து நின்றர். தனது அடிமைகள்பால் அகந்தை வந்தால் அதனை அகற்றி யாட்கொள்வது ஆண்டவனது கடமை. "தேவரையும் மாலயன் முதற் றிருவினர்கள் யாவரையும் வேறடிமையாவுடைய எம்மான்" என்கின்றர் சேக்கிழார் பெருமான்.

உடனே சிவமூர்த்தி குமார மூர்த்தியை யனுப்பினர். குமாரக் கடவுள் விரைந்து வந்து தருக்கி நின்ற வராகத்தின் கொம்பைப் பிடித்துப்பம்பரம்போல் சுழற்றினர். அப்போது திருமகள் வந்து வணங்கி மங்கலநாண் பிச்சை கேட்டனள். முருகவேள் திருவுளம் இரங்கி, வராக மூர்த்தியின் அகந்தையை மாற்றி, சிவனருளை ஏற்றி அதன் வளைந்த வெண்மையான கொம்பைக் கொணர்ந்து காணிக்கையாகப் பிதாவுடைய திருவடி மீது வைத்து வணங்கினர். மற்றுமுள்ளவர் அதனை அறிந்து உய்யும் பொருட்டு சிவபெருமான் திருமாலின் அக் கொம்பை மார்பில் அணிந்து கொண்டனர். தலையில் உள்ள பிறைமதியைப் போல் அதுவும் அழகாக விளங்கியது.

"பன்றியங் கொம்பு கமடம்புயங் கஞ்சுரர்கள்
பண்டை என்பங்க மணி பவர் சேயே"

என்று அருணகிரிநாதரும் திருப்புகழில் பாடுகின்றர்.

கேழல்—பன்றியினுடைய, ஓடு—வளைந்த தந்தத்தை, முன்னம் அணிவாற்கு—முன்னுள் அணிந்த சிவமூர்த்திக்கு என்பது இரண்டாவது வரியின் பொருள்.

இனி மூன்றவது வரியைச் சிந்திப்போம்.

இனி இதன் தத்துவார்த்தத்தையும் உன்னுவோம். இறைவன் சத்து சித்து ஆனந்தம் என்ற மூன்று தன்மைகளையும் உடையவன். சச்சிதானந்தன்.

''சூரிய சந்திரர் உள்ளவரை'' என்று சிலர் சாசனத்தில் எழுதுவார்கள்.

**யாவத் சந்திர திவாகரః**

என்பது வேதவசனம்.

ஆகவே நிலைபேற்றைக் குறிப்பவன் சூரியன். சத்து என்பது என்றும் உள்ளது

என்றும் உள்ள சூரியனைத் தண்டித்து, சத்துக்குஞ் சத்தாக நிற்பவன் தான் என்பதை உணர்த்தினர்

அத்தகைய சத்துப் போருளுக்கு ஊர்—தில்லை. ''மன்னு சிற்றம்பலம்'' என்பார் சேக்கிழார்.

**''குடக் கோடுவான் எயிறு கொண்டாற்குத் தில்லைஊர்**
**கேழல் முடக்கோடு முன்னம் அணிவான்''**

அறியாமை மேற்கோண்ட திருமாலை அடக்கி அறிவுச் சுடரை ஏற்றியதை இது தெரிவிக்கின்றது. எனவே சித்து சிதது—ஞானம்; ஞானம் வெண்மையைத் தரிக்கும். வெண்மையான தந்தத்தைத் தரித்தார்.

அஞ்ஞானம்—கருமை. கரிய யானையை உரித்து அதன் தோலை உடையாகக் கோண்டார்.

**''கேழல் முடக்கோடு முன்னம் அணிவாற்கு அதள் உடை''**

வடக்கோடு தேருடையானாகிய மன்மதன் ஆசையை விளைவிப்பான் அதனால் வருவது துக்கம். ஆசை நீக்கத்தினால் விளைவது ஆனந்தம்.

அவாவில்லார்க் கில்லாகுந் துன்பம் என்பார் திருவள்ளுவர். ஆசைக்கு மூலமாகிய மதனனை யழித்து, ஞானத்தினால் ஆனந்தத்தை யருளுபவர் சிவபெருமான். எனவே இது ஆனந்தத்தை யறிவிக்கின்றது. ஆனந்தம் அழிவில்லாதது. அழிவில்லாதது தருமம் ஒன்றே. தரிக்கச் செய்வது தருமம்'. தருமமே விடை. ஆகவே ஆனந்தமூர்த்தி மேற் கோள்வது ஆன். தருமவிடை மீது வந்து அழிவற்ற ஆனந்தத்தை ஆன்மாக்களுக்கு அருளுவார்.

சத்து சித்து ஆனந்தம் என்ற மூன்றையும் உடைய முக்கட் பெருமானை மூன்று வரிகளில் தேரிவித்து அவருடைய மூன்று செயல்களையும் தேரிவிக்கின்றது. இந்த அரிய செந்தமிழ் இன்பக் கவி''

**''வடக்கோடு தேருடையான் தெவ்வுக்கு மேற் கொள்ளல் ஆன்''**

ஊருடையான் என்று நான்காவது வரியில் அமைத்து, ஊர் உடை ஆன் எனப் பிரித்து ஊர் தில்லை என்றும், உடை அதள் என்றும், ஆன் ஊர்தியேன்றும் வைத்துப்பாடிய அவருடைய மதிநலத்தைச் சிந்தியுங்கள். இந்தக் கவி பாடிய அவர் வாழ்ந்த தமிழகத்தில் கோஞ்சம் படித்து விட்டு தலைக்கனம் ஏறலாமா? என்று கேட்கத் தோன்றுகின்றது.



உ

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர் 21 } துன்முகி ஆண்டு கார்த்திகைத் திங்கள் நவம்பர்-1956 { இதழ் 8

## திருப்புகழ்

### திருச்செந்தூர்

வெங்கா ளம்பா ணஞ்சேல் கண்பால்
மென்பா கஞ்சொற் குயில்மாலே
மென்கே சந்தா னென்றே கொண்டார்
மென்றே ளொன்றப் பொருள்தேடி

வங்கா ளஞ்சோ னஞ்சீ னம்போய்
வன்பே துன்பப் படலாமோ
மைந்தா ருந்தோள் மைந்தா அந்தா
வந்தே யிந்தப் பொழுதாள்வாய்

கொங்கார் பைந்தே னுண்டே வண்டார்
குன்ருள் கொங்கைக் கினியோனே
குன்ரே டுஞ்சூ ழம்பே ழுஞ்சூ
ரும்போய் மங்கப் பொருகோபா

கங்கா ளஞ்சேர் மொய்ம்பா ரன்பார்
கன்றே வும்பர்க் கொருநாதா
கம்பூர் சிந்தார் தென்பால் வந்தாய்
கந்தா செந்திற் பெருமாளே.

21-22

## பதவுரை

கொங்கு ஆர்=பூந்தாதுகளில் உள்ள, பை தேன் உண்டே=பசுமையான தேனை உண்டு, வண்டு ஆர்=வண்டுகள் நிறைந்துள்ள, குன்ருள் கொங்கைக்கு இனியோனே=வள்ளிமலையில் வாழுகின்ற வள்ளியம்மையாருடைய தனங்களுக்கு இனிமையானவரே! குன்ருேடும்=ஏழுமலைகளும், சூழ் அம்பு ஏழும்=சூழ்ந்துள்ள ஏழு கடல்களும், சூரும் போய் மங்க=சூரபன்மனும் வலிமை குன்றியழியுமாறு, பொருகோபா= போர் செய்து சினந்தவரே! கங்காளம் சேர் மொய்ம்பார்=எலும்புக் கூட்டை யணிந்த தோளையுடையவராகிய சிவபெருமானுடைய, அன்பு ஆர் கன்றே=அன்பு நிறைந்த பாலகரே! உம்பர்க்கு ஒரு நாதா=தேவர்கட்கு ஒப்பற்ற தலைவரே! கம்பு ஊர் சிந்து ஆர் தென்பால் வந்தாய்=சங்குகள் தவழும் கடலுடன் கூடிய தென் திசையில் வந்து அமர்ந்தவரே! கந்தா=கந்தக் கடவுளே! செந்தில் பெருமாளே=திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ளவரே! பெருமையிற் சிறந்தவரே! வெங்காளம்=வெப்பமான நஞ்சு, பாணம்=அம்பு, சேல்=மீன் என்ற இவைகளைப் போன்ற, கண்=விழிகளையும், பால்=பால், மெல்பாகு=மென்மையான சர்க்கரைப் பாகு என்ற இவை போன்ற, அம் சொல்=அழகிய சொற்களையும், குயில்=குயில் போலவும், மாலை=மாலையிருள் போலவும் கருமையுடைய, மென் கேசம்=மென்மையான கூந்தலையும், என்றே கொண்டார்=ஆகிய இவைகளைக் கொண்டவர்களாகிய பொதுமாதர்களது, மென் தோள் ஒன்ற=மெல்லிய தோள்களில் பொருந்தும் பொருட்டு, பொருள் தேடி=பொருளைத் தேடிக்கொண்டு, வங்காளம்=வங்காளதேசத்திற்கும், சோனம்=சோனக தேசத்திற்கும், சீன=சீனதேசத்திற்கும், போய்=சென்று, வன்பே துன்பப்படலாமோ=கொடிய துன்பங்களை யநுபவிக்கலாமோ? மைந்து ஆருந் தோள்=வலிமை நிறைந்த தோள்களையுடைய, மைந்தா=குமாரக் கடவுளே! அந்தா=அழகனே! வந்தே இந்தப் பொழுது ஆள்வாய்=அடியேன் முன் வந்து இப்போதே ஆட்கொண்டருளுவீர்.

## பொழிப்புரை

மணம் பொருந்திய மலர்களிலேயுள்ள பசுந்தேனை யுண்டு வண்டுகள் நிறைந்த மலையில் வசிக்கின்ற வள்ளியம்மை தனங்கட்கு இனியவரே! ஏழுமலைகளும், ஏழுகடல்களும், சூரபன்மனும் வலி குன்றிக் கதறுமாறு சினந்து போர் புரிந்தவரே! எலும்புக் கூட்டை யணிந்த தோள்களையுடைய சிவபெருமானுக்கு அன்புடைய புதல்வரே! தேவர்கட்கு ஒப்பற்ற தலைவரே! சங்குகள் உலாவுகின்ற கடலுடன் கூடிய தென்திசைக்கு வந்தவரே! கந்தப்பெருமானே! செந்தில் மேவிய பெருமிதம் உடையவரே! வெப்பமான நஞ்சையும் அம்பையும் மீனையும் ஒத்த கண்களையும், பாலையும் இனிய கற்கண்டின் பாகையும் ஒத்த அழகிய



சொற்களையும், குயில் போலவும் இருள்போலவும் கருமை நிறமுடைய மெல்லிய கூந்தலையும்கொண்ட பொதுமாதர்களுடைய மென்மையான தோள்களைச் சேரும்பொருட்டு, பொருளை நாடி, வங்கநாடு, சோனகம், சீனம் முதலிய தேசங்களுக்குச் சென்று மிகுந்த துன்பத்தை அடியேன் அடையலாமோ? ஆற்றல் அமைந்த திருப்புயங்களையுடைய குமார மூர்த்தியே! அழகரே! அடியேன்முன் இப்போதே வந்து ஆட்கோண்டருளுவீர்.

## விரிவுரை

### வேங்காளம் பாணஞ் சேல் கண் :—

மகளிருடைய கண்களுக்குப் பல உவமைகள் உண்டு. அவற்றுள் இங்கு நஞ்சு, கணை, மீன் என்ற மூன்றையும் எடுத்து அடிகள் உரைக்கின்றனர்.

வேப்பமான நஞ்சுபோல் தமது மயலில் வீழ்ந்தாரைக் கோல்லுந் தன்மையுடையது விலைமகளிருடைய கண்கள்.

பாணம் போலே பாயுந் தன்மையுடையது;
மீன் போலே பிறழுந் தன்மையுடையது;

### பால் மேன்பாகஞ் சோல் :—

அவ்விலைமகளிருடைய மோழி பாலையும் மேன்மையான சர்க்கரைப் பாகையும் ஒத்து காமுகர்க்கு இனிக்கும். அம்மோழியில் உருகி மயல் பேருகி மதிமயங்கி கதி விலகி கலங்குவர்.

பாலென்பது மொழி பஞ்சென்பது பதம் பாவையர்கண்
சேலென்பதாகத் திரிகின்ற நீ செந்திலோன் திருக்கை
வேலென்கிலை கொற்றமயூர மென்கிலை வெட்சித் தண்டைக்
காலென்கிலை நெஞ்சமே எங்ஙனே முத்தி காண்பதுவே.

—கந்தரலங்காரம்.

### குயில் மாலை மேன்கேசம்:—

மேல்லிய கேசம் (கூந்தல்) மிகுந்த கருமையுடன் இருக்கும். அதற்கு உவமை குயிலும் இருளும்; குயில் போன்ற கருமை; இருள் பூசியது போன்ற கருமை.

இருள்போன்ற கூந்தல் மேலும் மையல் இருளைத் தந்து ஆணவ இருளுக்கு அனுகூலம் புரியும். இருள் நிறைந்த இடத்தில் போருள் இன்னது என்று விளங்காததுபோல் கூந்தலின் இருளில் மதிமயங்கியோர்க்கு சேய்வன எவை; தவிர்வன எவை என்று விளங்காது. நான் யார்? எங்கிருந்து வந்தேன்? எதற்காக வந்தேன்? இந்த உடம்பு எவ்வாறு வந்தது? உடம்பு தானே வராதன்ருே? ஒருவன் தந்து வந்ததாயிற்றே? தந்தவன் எதன் போருட்டுத் தந்தான்? தன் போருட்டுத் தந்தானு? என்

பொருட்டுத் தந்தானா? உடம்பு பெற்றதன் பயன் எது? உடம்பைத் தந்தவன் யாவன்? அவன் தன்மைகள் எவை? அவனுக்கும் எனக்கும் என்ன தொடர்பு? அவனை யறிந்தவர் யார்? அறியும் நெறிகள் எவை? என்பனவாதி நற் சிந்தனைகள் தோன்ற, அங்கே ஒரு ஞான ஒளி தோன்றும். அந்த ஞான வொளியில் உண்மைப் பொருள் தோன்றும்.

அந்த ஒளியைப் பெறுவதற்கு ஒவ்வொருவரும் முயலுதல் வேண்டும். அந்த ஒளி ஒரு மலைபோல் தோன்றி, அவ்வொளி மலைமேல் அன்புக் கூட்டிலிருந்து வெளிப்பட்டு ஆனந்த ஆறு பாய்ந்தது. அங்கு எல்லாம் அற்ற இனிய தனி நிலையைத் தெளிய அருணகிரிநாதருக்கு ஐயன் - பன்னிருகையன் உபதேசித்துவிட்டான். ஆ! ஆ! அந்த ஆனந்தம் எத்தன்மையதோ?

ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத் துச்சியின்மேல்
அளியில் விளைந்ததோ ரானந்தத் தேனை அநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பியவா! முகமாறுடைத் தேசிகனே.

—கந்தரலங்காரம்.

அந்த ஒளியைப் பெறாதார் பொதுமகளிருடைய கூந்தலாகிய இருளில் மருளுற்று அருளற்று அல்லற் படுவர்.

**மென்றோ ளொன்றப் பொருள்தேடி :—**

மென் தோள் ஒன்ற:— ஒன்றுதல்—பொருந்துதல்; பொது மகளிருடைய மெல்லிய தோளைப் பொருந்தும் பொருட்டு அவர்களுக்கு அள்ளிக் கொடுக்கப் பொருள் வேண்டுமன்றோ? ஆகவே அருளை மறந்து பொருளைநினைந்து அப்பொருளைத் தேடும் பொருட்டு மாந்தர் பலர் அலைகின்றனர்.

தூயவழியில் பொருள் தேடினாலுங் குற்றமில்லை; தீய வழியில் பொருளையீட்டுகின்றார்கள். பலரை இம்சித்தும் பொய்யும் புனை சுருட்டும் புகன்றும், களவுசெய்தும், பிறருடைய வயிற்றிலடித்தும் அழிகின்ற பொருளைத் தேடுகின்றனர். அதனால் இம்மையில் பழியும் மறுமையில் பாவமும் எய்துகின்றன. இங்ஙனம் பாவ வழியில் தேடிய பொருள் மிகுதியைக் காட்டிலும் வறுமையே நல்லது என்கிறார் வள்ளுவர்.

'பழிமலைந் தெய்திய ஆக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை.'

தீயவழியில் ஈட்டிய பொருளை மாதர்க்கும் மனைவி மக்கட்கும் ஈந்து இவன் பாவமூட்டையைச் சுமந்து கொண்டு நரக உலகிற் சென்று பன்னெடுங்காலம் பரதவிக்கின்றான். என்னே மதியீனம்? தேடிய பொருளைத் தான் கொண்டு போகின்றானுமில்லை. பிறர் பொருட்டுப் பொருள்தேடி தான் பாவத்தைச் சுமந்து செல்



கின்றான். இவனைக்காட்டிலும் பேதையுளனோ? மிக்க பொருளு டையவர்களும் மேலும் பழிபாவங்கட்கு அஞ்சாது, வறியவர் கட்கு ஈயாது தீயவழிகளில் பெரும் பொருள் ஈட்டவே முயன்று கொண்டிருக்கின்றார்கள். அதனால் பிறவிப்பயனைப் பெறாது அவமே மாண்டு ஒழிகின்றனர்; பாவம்!

**வங்காளம் சோனம் சீனம் போய் :—**

அதிகபொருளை யீட்டவேண்டு மென்ற பேராசையால் தன் தேசத்தை விடுத்து அயல் தேசத்தையடுத்துப் போகின்றான். வங்கம் சோனகம் சீனம் முதலிய தேசங்கட்கெல்லாம் போகின்றான். அயல்தேசஞ் சென்று பஞ்சு படாதபாடு படுகின்றான்.

"பலதிக்கோடு திக்குவரை மட்டோடி மிக்கபொருள்
தேடிச் சுகந்த அணைமீதிற்று யின்று சுக
மிட்டாத ரத்துருகி வட்டார் முலைக்குளிடை
மூழ்கிக் கிடந்து மய லாகித்துளைந்து சில பிணியதுமுடி"

என்கின்றார் அடிகளார் பழநித் திருப்புகழில்.

**வன்பே துன்பப்பட லாமோ :—**

நிதிநாட்டம் உடையானுக்குக் கதி நாட்டம் ஏற்படாது. "நிதியை நினைந்து உனைமறந்த மதியை நினைந்து அழுவேனோ? நிமலானந்தக் கதியை மறந்து இருள் விழைந்த விதியை நினைந்து அழுவேனோ?" என்கின்றார் இராமலிங்க அடிகளார்.

பொருளாசையால் பெருந்துன்பம் எய்தும். இரவு பகலாக அலையச் செய்யும் பொருளாசை; செய்யாத ஈனச் செயல்களைச் செய்யச் செய்யும்.

அருணகிரிநாதசுவாமிகள் ஆண்டவனை நோக்கி "பெருமானே! இப் பொருளாசையால் அடியேன் பெருந்துன்பத்தை யடையலாமோ! அவ்வாறு அடைதல் கூடாது. ஆசையினின் றும் விலகி உய்யுமாறு தேவரீர் அருள்செய்யும்" என்று வேண்டுகின்றார்.

ஆனால் அருணகிரிநாதர் உள்ளபடியே பொருளாசை யுடையவர் என்று அன்பர்கள் கருதிவிடக்கூடாது. அவர் ஆசாநிகளந் துகளாகப் பெற்றவர்; ஆசாபயோதியைக் கடந்து நின்ற அரும்பெருந் தவஞானி; உலகவர்க்குள்ள ஆசைப் பாட்டைக் குறித்து வருந்தி இப்பாடலைப் பாடுகின்றார். மாணவர் குற்றத்தை ஆசிரியனும், மக்கள் குற்றத்தை மாதாபிதாவும் ஏற்றுக் கொள்வதுபோல், உலகவர் குற்றத்தைத் தாம் ஏற்று இப்பாடலைப் பாடுகின்றார் என அறிக.

**மைந்தாருந் தோள் மைந்தா:—**

உலகைப் புரக்கும் வீர அரசனுக்கு வலிமை நிறைந்திருக்க வேண்டும். வலிமை தங்குமிடம் தோள். அதனால்தான் இராமரை முதல் முதலாகக் கண்ட மிதிலை மாதர்கள் இது வீரம் உள்ள தோள்தானா? என்று எடுத்த உடனே முதலில் தோளை உற்று நோக்கினார்களாம்.

" தோள்கண்டார் தோளேகண்டார் "

அதனாலேயே "அவருடைய தோள்வலி கூறுவோர்க்கே" என்கின்றார் கம்பநாடர்.

ஒருநாட்டைக் காக்கின்ற மன்னவனுக்கு இத்தகைய தோள் வலி வேண்டும் என்றால் அகில உலகங்களை யாளும் எந்தை கந்தவேளுக்கு எத்தகைய தோள்வலி யமையவேண்டும்? அளவிலாற்றல் அத்தோளில் அமைந்துளது. அது அலகில் அவுணரைக் கொன்ற பேராற்றல் படைத்தது.

" அலகிலவுணரைக் கொன்ற தோளென "
" முற்றியபனிரு தோளும் "

அதனாலேயே வாழ்த்த வந்த கச்சியப்பர் முதலில் அத் திருத் தோள்களை வாழ்த்துகின்றார், 'ஆறிரு தடந்தோள் வாழ்க' என்று.

அத்தோள் அனைவரும் துதி செய்யும் அருமையுடையது. என்கின்றார். " எவருந் துதிக்க நின்ற ஈராறு தோள் போற்றி"

மைந்து—வலிமை. ஆர்—நிறைதல்.

வலிமை முழுவதும் நிறைந்த மைந்தன் முருகன். இனிய அடியவர்களின் வினைப் பகைகளையும் ஆணவாதி பகைகளையும் அழிக்கும் ஆற்றல் படைத்தவன்.

அவனை வழிபடுவோர்க்குப் பகையினால் வரும் அச்சம் இராது. கோள் நாள் கூற்று முதலிய இடர்கள் எய்தமாட்டா.

**கந்தா :—**

கந்தன்—பகைவர்களுடைய பராக்கிரமங்களை வற்றச் செய்பவன்; அகப்பகை, புறப்பகை என்ற இருபகைகளையும் போக்கி அருள்புரிபவன்.

**வந்தே இந்தப் பொழுதாள்வாய் :—**

"பெருமானே! நாளை, மறுநாள் என்று தவணை போடாமல் இப்பொழுதே என்முன் வந்து ஆட்கொள்வீர்" என்று சுவாமிகள் வேண்டுகின்றனர்.



ஆண்டவனைக்காண வேண்டும் என்ற ஆவல் உள்ளத்தில் துடிதுடித்துக் கொண்டிருக்க வேண்டும். தண்ணீரிலே அமுந்திய ஒருவன் மூச்சுவிட முடியாமல் திணறுவதுபோல் எவன் ஒருவன் இறைவனைக் காண வேண்டும் என்று துடிப்பானோ அவனுக்கு அத் துடிப்புள் இறைவன் தோன்றி யருள் புரிவான்.

இன்றிருப்பார் நாளையில்லை; வருகணத்து வாழ்ந்திடுமோ விழுமோ; இந்த மலக்கூடு; "சாநாளும் வாழ்நாளும் யாரறிவார்? நெருநல் உளனொருவன் இன்றில்லை. ஆனபடியால் எத்தனைக்கு எத்தனை விரைவில் முருகனுடைய காட்சியைக் காணலாம் என்ற ஆவலும் அளவுக்கு மேற்பட்ட காதலும் அமைதல் வேண்டும். அங்ஙனம் அமைந்த பாம்பன் அடிகளார்க்கு ஆண்டவன் அண்மையில் கனவிலும் நனவிலும் காட்சி தந்தனன்.

அளவிறந்த காதல் பூண்ட ராமகிருஷ்ணர் தேவியை நேருக்கு நேராகத் தெரிசித்தனர்.

**கோங்கார் பைந்தே னுண்டே வண்டார் குன்றாள் :—**

குன்றாள்—குன்றில் பிறந்து குன்றில் வாழ்கின்ற வள்ளியம் மையார். மலை மகள் மகனாகிய மலைக்கு நாயகன் மலை மங்கை யாகிய வள்ளியை மணந்து மலையில் எழுந்தருளியிருக்கின்றான்.

**குன்றோடும் :—**

சூரபன்மனுக்குத் துணையாக நின்ற ஏழுமலைகளையும் பெருமான் அழித்தனர்.

**சூழம் பேழும் :—**

உலகைச் சூழ்ந்துள்ள ஏழுகடல்களையும் வேலால் சுவற வைத்தனர்.

அம்பு—கடல்,

"எழுகடலும் எண் சிலம்பும் நிசிசரரும் அஞ்ச அஞ்சும் இமையவரை அஞ்சலென்ற பெருமாளே"

**சூரும் போய் மங்கப் பொருகோபா:—**

சூர்—சூரபன்மன்.

போய்மங்க—வலிமையழிந்து குன்றுமாறு முருகன் மறக் கருணையால் கோபிப்பார் போல் கோபித்துப் போர் புரிந்தார்.

குற்றம் புரியும் குழந்தைகளை அன்னை சினமுகங்காட்டித் தண்டித்துத் திருத்துவது போல முருகவேள்; சூராதியவுணரைத் தண்டித்து ஆண்டருளினார். மொய்ம்பு—தோள்.

உ
முருகா

# கற்பு

## செல்வநாயகி

"அம்மா! நேரமாகின்றது. சீக்கிரம் நான் பள்ளிக்கூடம் போகவேண்டும். பழையது போடு," என்ருள் செல்வநாயகி.

"ஆமாம்! நீ படித்து பேரிய உத்யோகம் பார்க்கப் போகின்ருயோ! ஆண் பிள்ளைகள் மாதிரி உன்ருல் உத்யோகம் பார்க்க முடியுமா? என்னமோ சற்று முன் பின் போனுல் என்னகுறை? வேலையாக இருக்கின்றேன். சற்று போறு" என்ருள் தாய்.

"அம்மா! அறிவு ஆற்றல் என்பவை ஆண்களுக்கும் பேண்களுக்கும் போதுவானவை. உயிருக்கு ஆண் பேண் என்ற வேற்றுமை கிடையாது. ஆண் பேண் என்பது இந்த உடம்பினுலே வந்த பிரிவினை. தவிர படிப்பது கேவலம் உத்யோகத்திற்கும், பணம் சம்பாதிப்பதற்கும் அல்ல? கல்வி பயில்வது அறிவை வளர்க்கும் போருட்டுத்தானே.

தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு.

என்கின்ருர் திருவள்ளுவதேவர்.

நான் நன்ருகப் படிப்பேனே யாயின் போன்னும் போருளும் புகழும் தானே வரும். கல்வியின் பயன் அறிவு. அறிவின் பயன் ஒழுக்கம்; ஒழுக்கத்தால் வருவது உயர்வு" என்ருள்.

---

**கங்காளஞ்சேர் மோய்ம்பார்:—**

கங்காளம்—எலும்புக் கூடு. சர்வசம்மார காலத்தில் மாண்ட மாலயனுதி வானவர்கள் தமது அடியார்கள் ஆதலின் அவர்களுடைய எலும்புக் கூடுகளைச் சிவபெருமான் தோளில் தரித்துக்கோண்டு அருளினுர்.

**அன்பார் கன்றே—**

சிவமூர்த்திக்கு அன்புடைய இளங்குமாரர். கன்று என்ற சோல் மிக்க அழகாக அமைந்துளது.

**கம்பூர் சிந்தார்—**

கம்பு—சங்கு. சிந்து—கடல். சங்குகள் ஊர்ந்து தவழ்கின்ற கடல்.

## கருத்துரை

வள்ளிமணவாளா! சிவகுமாரா! சேந்தில் மேவிய கந்தவேளே! மாதர் போருட்டு போருள் தேடி யலைந்து அடியேன் துன்புறமாட்டேன். இப்போழுதே வந்து அருள் புரிவீர்.



சரி, சரி; சாப்பிட்டுப்போ! என்று அன்னை அன்னமிட்டாள். செல்வநாயகி உணவு செய்து பள்ளிக்குப் புறப்பட்டாள்.

செல்வநாயகி பாடத்தைக் கவனமாகப் படிப்பாள். ஆசிரியரிடம் அடக்கமாக நடந்து கோள்வாள். மாணவ மாணவிகளிடம் ஒற்றுமையாக இருப்பாள். மருந்துக்கும் போய் சோல்ல மாட்டாள். கண்டவர்களுடன் கூடி விளையாடமாட்டாள். நல்ல உத்தமமான குணங்களை யுடையவளாக இருந்தாள். அந்த ஊரிலேயே அவளுக்கு நல்ல பேர். அடக்கமான பேண் என்று பேர் பேற்றிருந்தாள்.

ஒருநாள் தாயாரிடம் சேன்று, "அம்மா! எங்கள் பள்ளிக்கூடத்தில் 'ட்ராமா' நடக்கப்போகின்றது. நாங்கள் தான் ட்ராமாவில் நடிக்கப் போகின்ருேம். அதற்கு ஆள் 1க்கு பத்து ரூபாய் தர வேணும்; பத்து ரூபாய் கோடு; அன்றியும் பரிமேலழகர் உரையுடன் கூடிய ஒரு திருக்குறள் வாங்க வேணும்; அதற்குப் பணங் கோடு" என்ருள்.

"குழந்தாய்! என்னை என்ன பணக்காரி என்று எண்ணிக் கோண்டிருக்கின்றனையா? உன் தந்தையோ இல்லை. நான் வீடுவீடாகச் சேன்று கூலி வேலை செய்து உன்னைக் காப்பாற்று கின்றேன். உன் தந்தையிருந்தால் அந்த வாழ்க்கை வேறு. அவர் காலமாகி, பத்து வருடம் ஆகின்றது. நான் என்ன சேய் வேன்? அம்மா! அது வேண்டும், இது வேண்டும், என்று என்னை அடிக்கடி வந்து கேட்கின்ருய்? என் கையில் காசு ஏது? வயிற்றுக்குப் பாடுபடுவதே பேரிதாக இருக்கின்றது. காலம் வர வர கஷ்டமாக இருக்கின்றது. கடன் தருவாருமில்லை. என்னைப் பணங் கேட்காதே; நாடகத்தில் சேர்ந்து நடிக்காவிட்டால் என்ன குறை' நமது வாழ்க்கையே ஒரு நாடகமாகத்தானே இருக்கின்றது. ஒருநாள் தள்ளுவது ஒரு யுகமாக இருக்கின்றது. அம்மா! வீட்டு வாடகை தரவில்லை யேன்று வீட்டுக்காரன் நம்மை வறுத்துக் கோட்டுகின்ருன். வறுமைப் பிணியால் வாடுகின்ற நான் என்ன சேய்வேன்?" என்ருள்.

செல்வநாயகி, "அம்மா! படிக்கின்ற எனக்குப் புத்தகம் வாங்க முடியவில்லை. படியாத பிள்ளைகளுக்கு நிரம்பப் புத்தகம் வாங்கிப் பேற்ருேர்கள் தருகின்ருர்கள். தனவந்தர்கள் வீணுன சேலவுகள் லட்சாதி லட்சமாகச் சேய்கின்ருர்கள். கல்விக்காக வறிய மாணவ மாணவிகட்குப் புத்தகம் வாங்கித்தர மனமில்லை. நான் உனக்குத் தோந்தரவு தரமாட்டேன். என்னைக் காப்பாற் றும் போருட்டு நீ எத்தனையோ சிரமப்படுகின்ருய். நான் நன்கு அறிவேன். ஆண்டவன்தான் நமக்குத் துணை" என்று கூறிவிட்டுப் பள்ளிக்குச் சேன்ருள்.

மகளுடைய எண்ணத்தை நிறைவேற்ற முடியவில்லையே என்று தாய்க்கு வருத்தம். மனம் நோந்துக் கண்ணீர் வடித்து

நின்றாள். அச்சமயம் விண்ணிலிருந்து ஒரு வைரத்தோடு
வீழ்ந்தது. வானை நோக்கினாள் ஒரு கருடன் தன் காலில் எற்றிக்
கொண்டு வந்து எறிந்தது என உணர்ந்தாள். அவளால்
கண்ணை நம்பவே முடியவில்லை. அதனை எடுத்துப் பெட்டியில்
வைத்தாள். அவள் மனதில் மகிழ்ச்சி வரவில்லை. கவலையே
வந்தது. "அத் தோட்டிற்கு உரியவர்கள் யாரோ? அவர்கள்
பாவம் என்ன துன்பப்படுகின்றார்களோ? பிறர் பொருளை எட்டி
யாகப் பார்க்க வேணும் என்று பெரியவர்கள் கூறுவார்களே.
ஆகவே இது நமக்குப் பொருந்தாது; இதற்கு உடையவர்களிடம்
சேர்ப்பதுவே முறை; அவர்களை எப்படியறிவது?" என்று கருதி
சிந்தனைக் கடலில் ஆழ்ந்தாள்.

அந்தவூரில் ஒரு பெரிய தனவந்தனுடைய மகள் தனது
வைரத் தோட்டினைக் கழற்றி அருகே ஒரு தட்டில் வைக்க
அதனை உணவு என்று கருதிய கருடன் காலில் ஏற்றிக் கொண்டு
போனதாகவும், அதனைத் தொடர முடியவில்லை யென்றும்
செய்தி அந்த ஊரில் பரவியது.

அதனைக்கேட்ட செல்வநாயகியின் தாய் அந்த விலையுயர்ந்த
வைரத் தோட்டினைக் கொண்டு போய் அதற்கு உடையாரிடம்
தந்து நின்றாள். "ஐயா! ஒரு கருடன் காலில் எற்றிக் கொணர்ந்து
என்முன் இட்டது. உடையார்பால் சேர்க்க எண்ணினேன்.
இது தங்களுடையது தானே" என்றாள்.

அந்தத் தனவந்தன் அதிசயமடைந்தான். "வைத்தவன்
மறந்தால் எடுத்தவன் கொடுக்கின்ற காலமல்லவே இன்று?
இவர் வறுமையின் வடிவமாகக் காணப்படுகின்றார். பெரும்பணம்
படைத்த நமக்கே ஆசை விட்டபாடில்லை. மேலும் மேலும்
அல்வழியிலும் பொருளை யீட்டுகின்றோம். வறியவர்களைக் கண்டு
மனம் இளகுவதுமில்லை. அவர்களை வேலை வாங்கிக்கொண்டு
போதுமான கூலியும் தருவதில்லை. நமது மனோநிலைக்கும் இந்த
ஏழையின் மனோநிலைக்கும் ஏணி வைத்தால் கூட எட்டாது"
என்று எண்ணினான்.

"அம்மா! வணக்கம். உனது உத்தமமான குணத்தை மிக
வும் பாராட்டுகின்றேன். இது என்னுடைய குழந்தை கமலாம்
பாளுடையது. அவள் ஸ்நானஞ் செய்யும்பொருட்டுக் கழற்றி
வைக்கக் கருடன் எடுத்துக்கொண்டு போய்விட்டது. நல்ல
உடைமை நாடிக்கொண்டு வந்தது. இந்தக் காலத்தில் இப்படிப்
பிறருடைய உடைமை அகப்பட்டால் தேடிக்கொண்டு வந்து தர
மாட்டார்கள். அம்மா! மிகவுயர்ந்த குணம் உம்மிடம் உளது"
என்றான்.

"ஐயா! உடைமையை உடையவர்பால் தருவதில் பாராட்டு
தற்குரிய சிறப்பு யாதும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.
இது ஒவ்வொருவரும் செய்ய வேண்டிய கடமைதானே. இலவச



மாகத் தந்தால் பாராட்டலாம். சொத்து உம்முடையது. அதனை
உம்பால் சேர்க்கின்றேன். இதில் என்ன வியப்பு? நான் போய்
வருகின்றேன்" என்றாள்.

"அம்மா! சற்றுப் பொறும். உங்களைக் கண்டது எனது
புண்ணியவசம். அடிக்கடி வாரும்; இந்தக் காலத்தில் கடமை
உணராத மடமை மிகுந்தவர்கள்தான் மலிவு. இந்த 25 ரூபாயை
வைத்துக்கொள்ளுங்கள்" என்றான்.

"அண்ணலே! மன்னிக்கவேணும் எனக்குப் பணம் தேவை
யுண்டு. ஆனால் இதற்காகப் பணம் நான் வாங்கமாட்டேன்.
உங்கள் கருணையிருந்தால் போதும்" என்றாள்.

"அம்மா! அப்படிச் சொல்லக்கூடாது. என் நன்றிக்கு
அடையாளமாக இதனை ஏற்றுக்கொள்ளுங்கள். மனம் உவந்து
தருகின்றேன். உங்கள் தங்கமான குணத்திற்கு என்ன தந்தாலும்
தகும். தயவுசெய்து மறுக்காமல் ஏற்றுக் கொள்ளுங்கள்"
என்று கூறி மன்றாடினார்.

அதனை ஏற்றுக்கொண்ட அவள் தன் வீட்டிற்கு வந்தாள்.
மாலை மகள் வந்தவுடன் "குழந்தாய் பணம் பத்துருபாய் கேட்
டனையே? ஆண்டவன் கொடுத்தான். இருபத்தைந்து ரூபாய்
இந்தா; புத்தகம் வாங்கிக்கொள்; மற்ற பள்ளிச் செலவுகட்கு
வைத்துக்கொள்" என்றான்

இப்படி செல்வநாயகி மிகுந்த சிரமப்பட்டுப் படித்துக்
கொண்டிருந்தாள். அந்தப் பள்ளியில் முதல்தரமான மாணவி
யாக விளங்கினாள்.

ஒருநாள் அதிகாலை மன்னர் பெருமானுடைய அரண்மனை
வழியே செல்வநாயகி சென்றுகொண்டிருந்தாள். அரண்மனை
மாடி மீது சாளரத்தின் வழியே மன்னர் தெருவை எட்டிப்
பார்த்துவிட்டுத் திரும்பும்போது சாளரத்தின் மேல் மரத்தில்
மோதி தலையில் அடிபட்டது. சிறிது உதிரம் வந்து
விட்டது. உடனே மன்னவனுக்குக் கோபம் பொங்கியது.
"இன்று எழுந்தவுடனே வீதியை எட்டிப் பார்த்தேன். இப்
பெண்ணின் முகத்தில் விழித்தேன். விழித்ததன் பயன் மண்டை
யில் அடிபட்டது. இப்படி நாள்தோறும் இப் பெண்ணின்
முகத்தில் விழித்தவர்கட்கு இடர் வரும். ஆதலால் இப்
பெண்ணைக் கொண்டுபோய் சிரச்சேதஞ் செய்து விடுங்கள்"
என்று உத்தரவு செய்தான்.

உடனே ஒரு கொடிய சேவகன் வந்து செல்வநாயகியைப்
பிடித்து இழுத்தான். "ஐயா! என்னை ஏன் இழுக்கின்றீர்?"
என்று கேட்டாள் செல்வநாயகி. "இது மன்னர்பிரான் உத்தரவு.
உன்னைக் கொல்லுமாறு அரசர் கட்டளை" என்றான் சேவகன்.